# நாம் வசிக்கும் பூமி





(இந்தியா) லிமிடெட், சென்னை-1.

# நாம் வசிக்கும் பூமி

## நான்காம் வகுப்பிற்கு

K. S. மணவாள அய்யங்கார், B.A., B.T.
சமூக அறிவு ஆசிரியர், போர்டு உயர்நிலைப்பள்ளி, சேயாறு, வட ஆற்காடு ஜில்லா



புக்ஸ் (இந்தியா) லிமிடெட்
135, பவழக்காரத் தெரு :: சென்னை-1

 1952 [விலை அணு 12

முதற் பதிப்பு, 1952





## பதிப்பகம் பகர்வது

உலகம் மிகவும் பெரியது. இது பல வேறு வகைப்பட்ட தட்ப வெப்பங்களும், விளை பொருள்களும், தொழில்களும், ஆட்சி முறை களும் அடங்கிய ஒரு பெரிய வீடு; பல திறப் பட்ட பண்பாடுகளைக் கொண்ட சமூகத் தினரை மக்களாகப் பெற்ற ஒரு பெரிய குடும்பம். இந்த அரிய கருத்தை இளஞ் சிறுவர்கள் மனதில் பதிய வைப்பது பூகோளப் படிப்பா கும்.

இந்தப் புத்தகம் சிறுவர்கள் விரும்பிப் படிக்கும் வண்ணம் கண்ணைக் கவரும் படங்க ளுடனும், இனிய எளிய நடையிலும் அமைந் திருத்தலை இதனை மேற்போக்காக ஒரு முறை புரட்டிப் பார்ப்போரும் நன்கு அறிய லாம்.

எங்கள் பதிப்பகத்தின் மூலம் ஆரம்பச் சிறு வர்களுக்கென்று வெளியிடப்படும் இப் புத்த கம் அரசாங்கத்தாரின் பாடத்திட்டம் சிறி தும் வழுவா வண்ணம் பன்முறை கூர்ந்து கவனித்து அமைக்கப் பெற்றது. நன்முறை யில் வெளிவரும் இச்சிறு நூலைப் பள்ளி அதிகாரிகளும் ஆசிரியர்களும் ஆதரிப்பார்க ளென்று நம்புகின்றோம்.

பதிப்பாளர்கள்

சாந்தி பிரஸ், சென்னை-1

# முன்னுரை

பூகோளம் என்பது நாம் வசிக்கும் பூமி எத்தன்மையது என்பதையே விளக்கு கிறது. நீர் வளம், நிலவளம், சீதோஷ்ணம் இவைகளுக்கு ஏற்றபடி மக்கள் உணவு உடை முதலிய பழக்க வழக்கங்களில் வேறுபட்டு எப்படி வாழ்கிருர்கள் என்பதை விளக்கும் நூலே பூகோள நூலாகும்.

மற்றும் பூகோளப் பாடத்தினுல் பூமியில் வாழும் மக்கள் ஒருவர் உதவியை மற்றவர் நாடியே வாழவேண்டும் என்பது தெளிவாவதுடன் பரந்த நோக்கமும் சிறுவர் மனதில் பதியும்.

இப்பாடமானது வசிக்கும் சுற்றுப்புற பூகோள அறிவைக்கொண்டே கற்பிக்கப் படவேண்டும்; வெளியிடம் சென்று கவனித்தல், குறிப்புகள், படங்கள் தயாரித்தல், படக் காட்சி முதலியவைகள் மூலம் கவர்ச்சிகரமாகச் செய்யப்படல் வேண்டும்.

இவற்றைக் கவனித்தே, அரசாங்கத்தார் பாடத்திட்டத்தை அனுசரித்து இனிய எளிய நடையில், பட விளக்கங்களுடன் இப்புத்தகம் எழுதப்பட்டு இருக்கிறது. பயிற் சிக்குரிய செயல்முறை அட்டவணைகளும் சேர்க்கப்பட்டு இருக்கின்றன. படித்த விஷயங் களை நினைவுகூர்ந்துகொள்ள, கேள்விகளும் தரப்பட்டிருக்கின்றன. இப்புத்தகம் இன்னும் சிறப்பாக அமையும் பொருட்டுக் கூறும் யோசனைகளை வந்தனத்துடன் ஏற்றுக்கொள் கிறேன்.

இத்துறையில் என்னை ஊக்கி, இந்நூல் அச்சாகும் காலத்து அச்சுப்பிரதி களை ஒப்பு நோக்கி உதவிபுரிந்த என் மாணவ நண்பனுகிய சென்னை ஹிந்து தியலாஜிகல் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் **தணிகை. உலகநாதனுக்கும்**, இப்புத்தகத்தை நன்முறையில் அச்சிட்டு வெளியிட முன்வந்த **புக்ஸ் (இந்தியா) லிமிடெட்** கம்பெனியாருக்கும் என் நன்றி உரித்தாகும்.

இப் புத்தகத்தை ஆதரித்து என்னை இச்சிறு சேவையில் ஊக்குமாறு கல்வியில் கருத்துள்ள எல்லோரையும் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

திருவத்திபுரம்,
1—11—'52

K. S. மணவாள அய்யங்கார்,
ஆசிரியர்.

# பொருள் அடக்கம்


| எண் | பொருள் | பக்கம் |
|---|---|---|
| 1. | காற்று | 1 |
| 2. | மழை | 2 |
| 3. | மழையும் பனியும் | 3 |
| 4. | நீர் நிலைகள் | 4 |
| 5. | ஆறுகளும் அவற்றின் வேலையும் | 5 |
| 6. | உள்ளூரின் தரை அமைப்பும் இயற்கைத் தாவரமும் | 7 |
| 7. | கோளமும் அதில் நம் இந்தியாவும் | 9 |
| 8. | மண் வகைகளும் பயிர் வகைகளும் | 10 |
| 9. | இந்தியாவின் இயற்கை அமைப்பு | 12 |
| 10. | நதிகள் | 13 |
| 11. | போக்குவரத்துச் சாதனங்கள் | 16 |
| 12. | நகரங்கள் | 19 |
| 13. | திசை அறிதல் | 21 |
| 14. | பருவக்காற்றுகளும் மழையும் | 22 |
| 15. | இந்தியாவின் உஷ்ணநிலை | 23 |
| 16. | மலைப் பிரதேசங்கள் | 25 |
| 17. | ஜீலம் நதிப் பள்ளத்தாக்கு—காஷ்மீர நாடு | 28 |
| 18. | சிந்து நதிப் பள்ளத்தாக்குப் பிரதேசம் | 29 |
| 19. | கங்கைச் சமவெளிப் பிரதேசம் | 31 |
| 20. | மத்திய இந்திய நதிகள் பாயும் பிரதேசம் | 33 |
| 21. | காவேரி நதிப் பள்ளத்தாக்கு | 34 |
| 22. | தென்னிந்தியாவின் வேறு சில பிரதேசங்கள் | 37 |
| 23. | பீடபூமிப் பிரதேசம்—பம்பாய் | 39 |
| 24. | பீடபூமிப் பிரதேசம்—தென்பாகம் | 39 |
| 25. | மேற்குக் கடற்கரைச் சமவெளி | 41 |
| 26. | வட சர்க்கார்ப் பிரதேசம் | 43 |
| 27. | கர்நாடகச் சமவெளி | 44 |
| 28. | மதுரைச் சமவெளி | 45 |
| 29. | சென்னை நகரம் | 46 |
| 30. | இலங்கைத் தீவு | 48 |
| 31. | இந்தியாவின் தொழிற்சாலைப் பிரதேசம் | 50 |
| 32. | இந்தியாவின் ராஜ்யப் பிரிவுகள் | 51 |
| 33. | நமது ராஜ்யம் | 53 |
| 34. | உங்கள் தாலுக்கா | 56 |
| | சில பயிற்சிகள் | 56 |


இந்தியாவின்
இயற்கையமைப்பு
ஸ்கேல் - 0 100 200 300 400 மைல்கள்
70
80
90
30
20
10
இமய மலைத் தொடர்
பிரம்மபுத்ரா
ஜீலம்
சீனாப்
ராவி
ஸட்லெஜ்
சிந்து
சிந்து - கங்கைச் சமவெளி
தார்-பாலைவனம்
யமுனை
கோக்ரா
கங்கை
விந்திய மலை
நர்மதை
தபதி
மகாநதி
தக்ஷிண
பீடபூமி
கோதாவரி
கிருஷ்ணை
காவேரி
அரபிக் கடல்
வங்காளக் குடாக் கடல்
அந்தமான்
தீவுகள்
இலங்கை
இந்து மகா சமுத்திரம்
வ
உயர்ந்த மலைகள்
மலைகள்
பீடபூமி
சமவெளி
ஆழம்குறைந்தகடல்
கடல்

# நாம் வசிக்கும் பூமி

## நான்காம் வகுப்பு

---

### 1. காற்று

வானத்தில் காற்றுடி பறக்கிறதே, அதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? அது எதனல் பறக்கிறது? உங்கள் தோட்டத்தில் செடி கொடிகள் அசைகின்றனவே; அது ஏன் தெரியுமா? காற்றினல்தான். அந்தக் காற்று எங்கும் நிறைந்திருக்கிறது. ஆனல் அது நம் கண்ணுக்குத் தெரியாது. காற்றின் செயல்களைக் கொண்டு அதைத் தெரிந்துகொள்ளலாம். காற்று எப்போதும் ஒரேமாதிரி வீசிக்கொண்டிராது. சில சமயத்தில் பலமாகவும் வீசும்; சில சமயத்தில் இலேசாகவும் வீசும். சில சமயத்தில் காற்று வீசாமலும் இருக்கும். காற்று வீசாமலிருக்கும்போது அதை வாயு என்கிறோம்.

காற்று எப்போதும் ஒரே திசையில் வீசிக்கொண் டிராது. சில மாதங்களில் ஒரு திசையிலிருந்து வீசும்; சில மாதங்களில் வேறு திசையிலிருந்து வீசும். காற்று வீசும் திசையை மரக்கிளைகள் அசைவதாலும், காற்றுத் திசை காட்டும் கருவிகளாலும் அறியலாம். திசை காட்டும் கருவியில் அம்புக் குறியோ அல்லது சேவல் உருவமோ சுழலும் வகையில் பொருத்தப்பட்டிருக்கும். காற்றடிக்கும் திசையை அம்புக்குறியின் நுனிப்பாகமோ சேவலின் அலகுப்புறமோ திரும்பிக் காட்டும். அதைப் பார்த்தே காற்றடிக்கும் திசையை எளிதில் குறிக்கலாம். காற்றடிக்கும் இடத்தில் திசை காட்டும் கருவியை உயரத்தில் அமைக்கவேண்டும்.



காற்றுத் திசை காட்டி

காற்றிற்கு அது எத்திசையிலிருந்து வீசுகின்றதோ அத் திசையின் பெயரே கொடுக்கப்படுகிறது. மேற்கிலிருந்து வீசுங் காற்று மேல் காற்று; கிழக்கிலிருந்து வீசுவது கீழ்க் காற்று; வடக்கிலிருந்து வீசுவது வாடைக் காற்று; தெற்கிலிருந்து வீசுங்காற்று தென்றல் காற்று.

பகல்நேரத்தில் தரைப் பாகம் உஷ்ணமடைகிறது. அப்போது அங்குள்ள காற்று உஷ்ணமடைந்து லேசாகி மேலே கிளம்பி விடுகிறது. அப்பொழுது நீர் நிலைகளிலிருந்தும் கடலிலிருந்தும் குளிர் காற்று தரையை நோக்கி வீசுகிறது. அதுவே கடற்காற்று. இராக்காலங்களில் கடல் உஷ்ணமடைந் திருக்கிறது. அப்பொழுது நிலப் பாகத்திலிருந்து காற்று கடலை நோக்கி வீசுகிறது. அதுவே தரைக்காற்று என அழைக்கப் படுகிறது.



தரைக் காற்று கடற் காற்று

மூன்றும் வகுப்பில் நீங்கள் காற்றைப்பற்றிப் பதிவு செய்த குறிப்பைப் பாருங்கள். ஜுன் மாதத்திலிருந்து ஆகஸ்டு மாதம்வரை காற்று மேற்கிலிருந்து அடித்திருக்கிறது. ஆனால், இது உண்மையில் தென்மேற்கிலிருந்து அடித்த காற்று. அந்தக் காலம் கோடைக் காலம். அக்டோபரிலிருந்து டிசம்பர் மாதம்வரை வடக்கிலிருந்து காற்றடித் திருக்கிறது. இது உண்மையில் வடகிழக்கிலிருந்து அடித்த காற்று. அந்தக் காலம் குளிர் காலம். தென்மேற்கிலிருந்து அடிக்கும் காற்றைத் தென்மேற்குப் பருவக்காற்று என்றும் வடகிழக்கிலிருந்து அடிக்கும் காற்றை வடகிழக்குப் பருவக் காற்று என்றும் அழைக்கிறோம். குறிப்பிட்ட காலங்களில் அடிப்பதாலேயே இவைகளைப் பருவக்காற்றுகள் என்கிறோம்.

### கேள்விகள்

1. காற்றடிக்கும் திசையை எப்படித் தெரிந்துகொள்ளலாம்?
2. கடற்காற்றும், தரைக் காற்றும் எப்படி உண்டாகின்றன?
3. பருவக்காற்றுகள் எவை?

### பயிற்சி

தினசரி காற்று எந்தத் திசையிலிருந்து வீசுகிறது என்பதைக் குறித்துவை.

---

## 2. மழை

'மாரி யல்லது காரிய மில்லை.' மழை இல்லாவிட்டால் புல் பூண்டுகளும் தலைகாட்டா; விளை பொருள்களும் விளையா. குளிக்க நீரும் குடிக்க நீரும் கிடைக்க மாட்டா. பூமியே வறண்டு மக்களில்லாத பாலை நிலமாக மாறிவிடும். ஆகவே பூமி குளிரவும், மக்கள் வாழவும், பயிர்கள் செழிக்கவும் மழை அவசியமாகும்.

மழை எப்பொழுதும் ஒரே மாதிரியாகப் பெய்வதில்லை. சில மாதங்களில் மழை அதிகமாகப் பெய்கிறது; சில மாதங்களில் குறைவாகப் பெய்கிறது; சில மாதங்களில் பெய்வதேயில்லை. ஓரிடத்தில் பெய்த மழையின் அளவை எப்படித் தெரிந்து கொள்வது? படத்தில் காட்டப்பட் டிருப்பதுபோல் அதற்கு ஒரு கருவி இருக்கிறது. அதன் பெயர் மழையளக்கும் கருவி. அதன் உதவியால் உங்கள் ஊரில் பெய்யும் மழையின் அளவை நீங்கள் அறிந்து கொள்ள முடியும்.


மழையளக்கும் கருவி

சென்ற ஆண்டில் மூன்றும் வகுப்பில் மழையைப் பற்றிக் குறித்துள்ள குறிப்பைப் பாருங்கள். அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாதங்களில் அதிக மழை பெய்திருக்கிறது. இந்த மழை வடகிழக்குப் பருவக் காற்றினல் உண்டாகியிருக்கிறது. இந்த மழையைக் குளிர்கால மழை என்று சொல்லுகிறோம். ஜுலை, ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் அவ்வளவாக மழையில்லை; சொற்ப மழையே பெய்திருக்கிறது. இந்தச் சொற்ப மழை தென்மேற்குப் பருவக்காற்றினல் உண்டாகி யிருக்கிறது. இந்த மழையைக் கோடை மழை என்று அழைக்கிறோம்.

மழை சம்பந்தமான சில பழமொழிகளைக் கவனித்துப் பாருங்கள்.

(1) 'புரட்டாசி பொன்னுருகக் காய்ந்து மண்ணுருகப் பெய்யும்' (2) 'ஐப்பசி அழுகைத் தூறல்' (3) 'கார்த்திகை கனத்த மழை' (4) 'கர்ணனுக்குப் பின் கொடையுமில்லை; கார்த்திகைக்குப்பின் மழையுமில்லை'.

### கேள்விகள்

1. ஓரிடத்தில் பெய்கின்ற மழையின் அளவை எப்படித் தெரிந்துகொள்ளலாம்?
2. உங்களூரில் எந்தெந்த மாதங்களில் அதிக மழை பெய்கிறது?
3. கோடை மழை என்று எதைச் சொல்லுகிறோம்?

---

## 3. மழையும் பனியும்

மழை எப்படி உண்டாகிறதென்பது உங்களுக்குத் தெரியும். நீர் நிலைகளிலுள்ள நீர் சூரிய உஷ்ணத்தால் ஆவியாகி மேலே சென்று மேகமாகிறது. அது குளிர்ந்த காற்றுப் பட்டவுடன் மழையாகப் பெய்கிறது. கருமேகமே கனத்த மழையைத் தரும்.


மழை உண்டாகும் விதம்

குளிர் மாதங்களில் பகலில் சூரிய வெப்பத்தால் காற்று உஷ்ண மடைகிறது. அக்காற்றிலுள்ள நீராவி இரவில் ஏற்படும் குளிர்ச்சியால் நீர்த் துளிகளாக மாறும். இதையே பனித் துளிகள் என்கிறோம். குளிர் மாதங்களில் காலையில் புல் பூண்டுகளில் நீர்த் துளிகள் முத்துப்போலத் தங்கி இருப்பதைப் பார்க்கிறோம். மார்கழி, தை, மாசி, பங்குனி மாதங்கள் குளிர் மாதங்கள் ஆகும்.

சில வேளைகளில் காற்றிலுள்ள நீராவி குளிர்ந்து பனித் துளிகள் அடர்ந்து புகைபோல் தோன்றுவது முண்டு. அதையே மூடுபனி என்கிறோம். மூடுபனி காலையிலும் மாலையிலும் ஏற்படும். சில சமயங்களில் எதிரில் சமீபத்தில் வருகின்றவர்கள்கூடத் தெரியமாட்டார்கள். இந்நிலை சூரிய உதயம் வரைதான் இருக்கும். சூரிய உஷ்ணம் பட்டவுடன் பனி விலகிவிடும். 'சூரியனைக் கண்ட பனிபோல்' என்ற பழமொழியை நீங்கள் கேள்விப்பட்டதுண்டா?

மார்கழி, தை மாதங்கள் முன் பனிக்காலம். மாசி, பங்குனி மாதங்கள் பின் பனிக்காலம். தையில் தரையும் குளிருமென்று கூறுவர். 'தையும் மாசியும் வையகத் துறங்கு' என்னும் பழமொழியின் உண்மையைத் தெரிந்துகொள்ளுங்கள். மூடுபனி குளிர் மாதங்களில் தான் உண்டாகும்.

### கேள்விகள்

1. மழை எப்படி உண்டாகிறது?
2. பனி எப்படி உண்டாகிறது?
3. மூடுபனி எந்த மாதங்களில் உண்டாகும்?
4. மழை சம்பந்தமாக வழங்கும் சில பழமொழிகள் எவை?

---

## 4. நீர் நிலைகள்

மழை நமக்கு வேண்டும்போது பெய்யாது; எப்பொழுதும் பெய்துகொண்டும் இராது. ஆகவே பெய்யும்பொழுது மழை நீரை ஏரி, குளம், குட்டைகளில் நம் உபயோகத்திற்காகத் தேக்கி வைத்துக்கொள்ளுகிறோம். இப்படித் தண்ணீரைத்



ஏரி



குளம்

தேக்கி வைத்துக்கொள்ளும் இடங்களையே நீர் நிலைகள் என்கிறோம். இவைகளே நமக்குக் குடிப்பதற்கும், குளிப்பதற்கும், பயிர் செய்வதற்கும் நீரைத் தந்து உதவுகின்றன. ஆறுகளிலும் அணைகள் கட்டி நீரைத் தேக்கிப் பாசனத்திற்குப் பயன்

படுத்துகிறோம். நம் தென்னிந்திய நதிகள் எல்லாவற்றிலுமே அணைகள் கட்டித் தண்ணீரைத் தேக்கிப் பாசனத்திற்குப் பயன்படுத்தி வருகிறார்கள். நம் தென்னாட்டில் காவிரியாற்றில் கண்ணம்பாடி அணை, மேட்டூர் அணை, பெரிய அணை, கீழ் அணை முதலிய பல அணைகள் கட்டப்பட்டுள்ளன. அவற்றின் மூலம் நீரைக் குறிப்பிட்ட உயரம் தேக்கிப் பாசனத்துக்குக்கொண்டுபோகிறார்கள். ஆற்றுப் பாய்ச்சல் இல்லாத பிரதேசங்களில் கிணறு தோண்டிப் பயன் அடைகிறார்கள். பெய்யும் மழை நீரின் ஒரு பகுதி பூமியில் சுவறிவிடுகின்றது. அப்படிச் சுவறிவிடும் நீரை மக்கள் கிணறு தோண்டிக் குடிப்பதற்கும், குளிப்பதற்கும், நீர்ப்பாசனத்திற்கும் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள்.



குட்டை

கிணற்று நீரை ஏற்றம் போட்டும், கவலை ஓட்டியும், மின்சார யந்திரங்களைக் கொண்டு குழாய்கள் மூலமும் பயன்படுத்துகின்றனர்.

### கேள்விகள்

1. நீர் நிலைகள் எவை?
2. நீரைத் தேக்கி வைப்பது ஏன்?
3. உங்களுக்குத் தெரிந்த அணைகள் சிலவற்றின் பெயரைக் கூறுக.
4. உங்களூரில் பாயும் ஆற்றின் பெயரென்ன? அதில் எங்கு அணைகட்டி இருக்கின்றனர்?
5. கிணறுகளுக்கு நீர் எப்படிக் கிடைக்கிறது?
6. உங்களூர் ஆற்றுப் பாசனமா? ஏரிப் பாசனமா? கிணற்றுப் பாசனமா?
7. உங்களூரில் குடி தண்ணீருக்கு என்ன வசதி இருக்கிறது?

---

## 5. ஆறுகளும் அவற்றின் வேலைகளும்

'ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்' என்பார்கள். ஆறுகள் ஊர் மக்களுக்குப் பயன் தருவதுடன் ஊருக்கு அழகையும் உண்டாக்குகின்றன என்பது இதனால் விளங்கவில்லையா?

மேட்டுப் பிரதேசம், மலைகள் முதலிய இடங்களில் பெய்யும் மழையே பெருக்கெடுத்து ஆறுகளாக ஓடிப் பாய்கின்றன. முதலில் ஓர் ஆறு சிறு அருவியாகவே ஆரம்பிக்கிறது. பிறகு பல அருவிகள் வந்து கலந்து பெரிய நதியாக மாறுகிறது. ஆறு மேட்டிலிருந்து பள்ளப் பிரதேசங்களை நோக்கி ஓடிவருவதால்

ஆங்காங்குள்ள நிலப் போக்கிற்குத் தக்கபடி தன் போக்கையும் மாற்றிக்கொள்ளு கிறது. ஆகவே ஆறுகள் வளைந்து வளைந்து ஓடுவதைப் பார்க்கிறோம். ஆறு மேட்டுப் பிரதேசத்திலிருந்து சம நிலத்திற்கு இறங்கும் பொழுது சில இடங்களில்



ஆற்றின் போக்கு

நீர்வீழ்ச்சியாக விழுகிறது; சமநிலத்தில் பாயும்போது மெதுவாகப் பாய்கிறது. ஆறுகள் கடைசியில் கடலில் சங்கமமாகின்றன. சில சிறிய ஆறுகள் உள் நாட்டிலேயே பள்ளங்களில் சங்கமமாகித் தேங்கிவிடுவதும் உண்டு. ஆறுகள் சம நிலத்தில் பாயும் பொழுது வண்டலைக் கொண்டு நிலத்தைச் செழிப்பாக்குவதுடன் பாசனத்திற்கும் பயன்படுகின்றன.

ஆறுகளை மும்மூர்த்திகள் என்று கூறலாம். பிரம்மா, ருத்திரன், விஷ்ணு இவர்களுக்குள்ள முத்தொழிலாகிய ஆக்கலும், அழித்தலும், காத்தலும் ஆறுகளிடம் இருப்பதைப் பார்க்கலாம். வெள்ளப் பெருக்கால் ஆறுகள் ஓரிடத்தை அழித்து விடுகின்றன. ஆறுகள் பாய்வதால் வறண்ட பாலை நிலங்களும் செழிப்புள்ள நிலங்களாக மாறுகின்றன. தங்கள் நீர்ப் பெருக்கால் நதிகள் உலகிலுள்ள மக்களை உய்விக்கின்றன. ஆகவே ஆறுகளிடம் ஆக்கல், அழித்தல், காத்தல் என்னும் முக் குணங்களும் இருப்பதைப் பார்க்கிறோம். 'ஆறிடும் மேடும் மடுவும்போல் ஆம் செல்வம்' என்ற செய்யுள் அடியைக் கவனித்துப் பாருங்கள். இதனால், ஆறுகள் மண்ணை அரித்து மேடுகளைப் பள்ளமாக்கும்; பள்ளங்களை அடித்துவரும் மண்ணால் நிரப்பி மேடாக்கும் என்று தெரிகிறது. ஆறுகளின் முக்கிய வேலை தரைமட்டத்தை மேடாகவும் பள்ளமாகவும் செய்வதும், வெள்ளப் பெருக்கால் தன் போக்கை மாற்றிக் கொள்வதுமே ஆகும்.

ஆறுகளின் பல பாகங்களைப் பார்ப்போம். ஆறுகள் மலைப் பக்கம் அல்லது மேட்டுப் பாகங்களிலிருந்து உற்பத்தியாகின்றன. அதை உற்பத்தி ஸ்தானம் என்கிறோம். மேட்டை விட்டு வேகமாகச் சம நிலத்தில் விழும்போது நீர்வீழ்ச்சி என்கிறோம். சம நிலத்தில் செல்லும் பிரதேசத்தைப் பாயுமிடம் என்கிறோம். கடைசி

யில் அது கலக்குமிடத்தைச் சங்கமமாகுமிடம் என்கிறோம். இதனுடன் வந்து கலக்கும் நதியை உபநதி என்கிறோம். பிரிந்து போவதைக் கிளை நதி என்கிறோம்.

நதிகள் கடலில் கலக்கும் பொழுது கடல் நீரின் எதிர்ப்பக்கம் தண்ணீர் தேக்கங்கொள்ளும். அப்போது அவற்றால் அடித்துவரப்பட்ட வண்டல் மண் சங்கமமாகுமிடத்தில் படியும். பல வருஷங்களில் அது ஒரு மேடாகும். அதையே டெல்டா அல்லது கழிமுகத் தெதிர் நிலம் என்கிறோம். வண்டல் மண்ணால் ஆன மேடு மிகச் செழிப்புள்ளதாகும்.

ஆற்றின் பயனைப் பற்றி உணரும் பொழுது நீங்கள் படித்த 'ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அந்நாளும் ஊற்றுப் பெருக்கால் உலகு ஊட்டும்' என்னும் அடிகளை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். ஆறுகள் குடிக்கவும், குளிக்கவும், நீர்ப் பாசனத்திற்கும் உதவுகின்றன ; சில போக்குவரவிற்கும் பயன்படுகின்றன. நீர் வீழ்ச்சிகளினால் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது.

### கேள்விகள்

1. ஆறுகள் எப்படி உண்டாகின்றன?
2. ஆறுகளின் பயன்கள் எவை?
3. ஆறுகளின் வேலைகள் எவை?
4. ஆறுகளின் பல பாகங்களைப் படம் வரைந்து விளக்குக.
5. உபநதிகள், கிளை நதிகள் என்றால் எவை?
6. டெல்டா என்று எதற்குப் பெயர்? அது எப்படி உண்டாகிறது?

### கவனியுங்கள்

1. வெள்ளம் வரும்பொழுது ஆற்றுக்குச் சென்று கவனியுங்கள்.
2. மழை பெய்த உடன் தண்ணீர் எப்படித் திரண்டு ஓடுகிறது என்பதைக் கவனியுங்கள்.
3. ஏதாவது அணைக்கட்டு சமீபத்திலிருந்தால் சென்று பார்ப்பது நல்லது.

---

## 6. உள்ளூரின் தரை அமைப்பும் இயற்கைத் தாவரமும்

ஓர் இடத்தின் தரை அமைப்பை அங்குள்ள மலைகள், ஓடும் ஆறுகள், பள்ளங்கள் இவைகளைக் கொண்டே சொல்லிவிடலாம். ஆறுகளின் போக்கைக் கொண்டு உங்களூரின் நில அமைப்பு எப்படியிருக்கிறது என்று சொல்லலாம். ஆறு மேட்டிலிருந்து பள்ளத்திற்குத்தான் ஓடுமல்லவா? உற்பத்திப் பாகம் மேடு. ஓடுமிடம், பாயுமிடம், சங்கமமாகுமிடம் இவை சரிந்து தாழ்ந்தவை.

மனிதன் பயிரிடாமல் தாமாக வளரும் தாவரமே இயற்கைத் தாவரம் எனப்படும். காடுகள், புல்வெளிகள், முட் செடிகள், சதுப்பு நிலத் தாவரங்கள் இவைகள் எல்லாம் இயற்கைத் தாவரங்களே.


முட் செடிகள்

இவற்றில் காடுகள் மிகவும் பயனுள்ளவை. இவை நமக்கு வேண்டிய மரங்களைத் தருகின்றன. அவைகளிலிருந்து கிடைக்கும் காட்டுப் பொருள்கள் பல உண்டு. உங்கள் ஞாபகத்தில் உள்ள சிலவற்றைச் சொல்லுங்கள்.


புல் வகை


கோரை

காடுகள் மழை பெய்வதற்குக் காரணமாகவும் உள்ளன. எப்படி? இவைகளின் மேல் மேகங்கள் வரும்பொழுது காடுகளினின்றும் குளிர்ந்த காற்று வீசுவதால் அவை மழையைப் பொழிகின்றன. காடுகளே ஒரு நாட்டின் செல்வம். காடுகள் அழிந்தால் மக்களுக்கு நஷ்டம். அரசாங்கம் அதனால்தான் காட்டிலாகா மூலம் காடுகளைப் பாதுகாக்கிறது. அரசாங்கத்திற்குக் காடுகளின் மூலம் வருவாய் கிடைக்கிறது.


காடுகள்

மற்றும் புல்தரைகள் கால் நடைகளுக்குத் தீனியாவதுடன் தரையை வேரால் கெட்டிப்படுத்தி மழையால் மண் அரிக்கப்படுவதைத் தடுக்கின்றன. பசும்புல் தரைகள் பச்சைக் கம்பளம் விரித்ததுபோல் பார்ப்பதற்கு அழகாக இருக்கும்.

### கேள்விகள்

1. உங்களூரின் இயற்கைத் தாவரங்கள் எவை?
2. ஒரூரின் தரை அமைப்பை எப்படி அறியலாம்?
3. இயற்கைத் தாவரங்கள் எவை? அவை நமக்கு எப்படி உதவுகின்றன?
4. காடுகளால் நமக்கு என்ன பயன்?

---

## 7. கோளமும் அதில் நம் இந்தியாவும்

இந்தப் படத்தைப் பாருங்கள். இது ஒரு கோளம். இதை ஆங்கிலத்தில் குளோப் என்று சொல்லுவார்கள். நாம் வசிக்கும் பூமியும் இதைப்போலவே உருண்டையாக இருக்கிறது. ஆனால் அது நம் கண்களுக்குத் தட்டையாகக் காணப்படுகிறது. இந்த உலகம் மிகவும் பெரியது. இதில் நாம் ஒரு சிறிய பாகத்தில்தான் வசிக்கிறோம். நாம் பார்க்கும் சிறிய பாகமே நமக்குத் தட்டையாகத் தெரிகிறது. பூமி முழுவதும் உருண்டையாகவே இருக்கிறது. ஆனால் அது ஒரு பந்தைப்போலச் சரியான உருண்டை வடிவத்தில் இல்லை. அது கிச்சிலிப் பழத்தைப்போல வடக்கிலும் தெற்கிலும் சற்று உள்ளடங்கித் தட்டையாக இருக்கிறது.



கோளம் அல்லது குளோப்

உங்கள் பள்ளிக்கூடத்தில் கோளம் இருக்கிறதா? கோளத்தைக் கையால் சுற்றிப் பாருங்கள். அது நன்றாகச் சுற்றுகிறதல்லவா? அது எப்படிச் சுற்றுகிறது? கோளத்தின் நடுவில் ஒரு கம்பி செல்லுகிறது. இதற்குக் கோளத்தின் அச்சு என்று பெயர். இதன்மீது கோளம் சுற்றுகிறது. இதைப் போலத்தான் பூமியும் தன்னைத் தானே சுற்றிக்கொண்டிருக்கிறது. ஆனால் உண்மையில் பூமியின் நடுவில் அச்சு ஒன்றும் இல்லை. பூமியின் நடுவில் அச்சு ஒன்று இருப்பதாக நாம் பாவித்துக்கொள்ள வேண்டும். இதைப் **பூமியின் அச்சு** என்று சொல்லலாம்.

பூமியின் அச்சு வடக்கிலும் தெற்கிலும் உள்ள இரண்டு முனைகளைச் சேர்க்கிறது. இந்த இரு முனைகளுக்கும் **துருவங்கள்** என்று பெயர். வடக்கில் உள்ள முனை **வட துருவம்**; தெற்கில் உள்ள முனை **தென் துருவம்.**

கோளத்தின் மத்தியில் ஒரு கோடு கிழக்கு மேற்காகச் செல்வதைக் கவனி. அதற்குப் பூமத்திய ரேகை என்று பெயர். பூமத்திய ரேகை கோளத்தை வடக்கிலும் தெற்கிலும் இரண்டு சம பாகங்களாகப் பிரிக்கிறது. கோளத்தில் நம் இந்தியா தேசம் எங்கிருக்கிறது என்பதைக் கண்டுபிடியுங்கள். இந்தியா பூமத்திய ரேகைக்கு வடக்கில் சற்று தூரத்தில் இருக்கிறது. இந்தப் பரந்த பூமியில் நம் இந்தியா எவ்வளவு சிறிய பாகத்தில் இருக்கிறது என்பதைப் பாருங்கள்.

### கேள்விகள்

1. பூமியின் வடிவம் என்ன?
2. பூமியின் அச்சு என்றால் என்ன?
3. துருவங்கள் எத்தனை? அவை எவை?
4. பூர்த்தி செய்:

   பூமியின் நடுவில் கிழக்கு மேற்காகச் செல்லும் கோட்டிற்கு ———— என்று பெயர்.

   நம் இந்தியா தேசம் பூமத்திய ரேகைக்கு ———— இருக்கிறது.

———

## 8. மண்வகைகளும் பயிர் வகைகளும்

நிலவளத்திற்கும் தன்மைக்கும் தகுந்தபடியே பயிர்கள் விளைகின்றன. மலைப் பாங்கான பிரதேசங்களில் அடர்ந்த காடுகள் இயற்கையாகவே வளர்ந்திருக்கும்.



நெல்



கரும்பு



தென்னை



வேர்க்கடலை



கம்பு



சோளம்



துவரை



பருத்தி

வளமான நீர்ப்பாசன வசதியுள்ள இடங்களில் நன்செய்ப் பயிர்களான நெல், கரும்பு, வாழை முதலியன பயிராகும். மண்வளமும் நீர்ப்பாசனமும் குன்றிய இடங்களில் புன்செய்த் தானியங்களான கம்பு, சோளம், கேழ்வரகு, உளுந்து, வேர்க்கடலை முதலியன பயிராகும். மணற்பாங்கான ஆற்றோரங்களில் தென்னை வளரும். செம்மண் பூமியில் துவரை நன்றாகப் பயிராகும். ஈரத்தைக் காக்கும் கரிசல்மண் பிரதேசத்தில் பருத்தி செழித்து வளரும். சதுப்பு நிலங்களில் கோரை போன்றவை பயிராகும்.

### கேள்விகள்

1. மண் வளத்திற்குத் தக்கபடி பயிர் விளையும் என்பதை உதாரணத்துடன் விளக்கு.
2. பூர்த்தி செய்:

 கரிசல்மண் ———— பயிருக்கு ஏற்றது.
 செம்மண் பூமியில் ———— நன்றாக விளையும்.
 சதுப்பு நிலத்தில் ———— வளரும்.
 நன்செய்ப் பயிருக்கு ———— தேவை.

3. நன்செய், புன்செய்ப் பயிர்கள் எவை?
4. பருத்திக்கு கரிசல் மண் பூமி ஏற்றது. ஏன்?
5. உங்களூர் நிலத்தன்மை எந்தப் பயிருக்கு ஏற்றது?

### செய்து பார்

1. மண் வகைகளைச் சேர்த்து அதன்கீழ் ஒவ்வொரு வகை மண்ணிலும் பயிராகக் கூடிய பயிர்களின் படங்களை ஒட்டு.
2. பயிர் வகைகளின் பெயர், பயிரிடுங்காலம், அறுவடைக் காலம் என்ற தலைப்பில் ஒரு இயற்கைப் பஞ்சாங்கம் தயார் செய்.

———

## 9. இந்தியாவின் இயற்கை அமைப்பு

நம் தேசத்தின் இயற்கை அமைப்புப் படத்தைப் பாருங்கள். என்ன காண்கிறீர்கள்? மேடு பள்ளங்கள் பல வர்ணங்களால் பிரித்துக் காண்பிக்கப்பட்டிருப்பதைப் பார்க்கிறீர்கள். பழுப்பு வர்ணத்தால் மலைகளும், மஞ்சள் வர்ணத்தால் பீட பூமிகளும், பச்சை வர்ணத்தால் சமவெளிப் பிரதேசங்களும், நீல வர்ணத்தால் கடல்களும் காண்பிக்கப் பட்டிருக்கின்றன.

தேசப் படத்தில் நிலப்பாகம் மேடு பள்ளங்களுக்குத் தகுந்தபடியும், கடலின் ஆழத்துக்குத் தகுந்தபடியும் தடிப்பாகவும் மெல்லியதாகவும் வர்ணம் கொடுக்கப்பட்டிருப்பதைப் பாருங்கள். கடலின் மத்திய பாகத்தில் மிக அழுத்தமான நீல நிறமும் கரையோரங்களில் மெல்லிய நீல நிறமும் தீட்டப்பட்டிருக்கின்றன. இதனால் கடற்கரையில் ஆழமில்லாமலும் நடுவே போகப் போக ஆழமாகவும் இருப்

பதை அறியலாம். இவ்வாறே மிக அழுத்தமான பழுப்பு நிறம் அதிக உயரமான மலைகளையும் மெல்லிய பழுப்பு நிறம் சற்றுக் குறைந்த உயரமுள்ள மலைகளையும் காட்டும்.

இந்தியா மூன்று பக்கங்களில் கடலால் சூழப்பட்டிருக்கிறது. இப்பாகங்களில் நீல வர்ணம் தீட்டப்பட்டிருப்பதைப் பாருங்கள். நம் இந்தியாவுக்கு வடக்கே மிக உயரமான மலைகள் இருக்கின்றன. இவை வடக்கில் பெருஞ்சுவர்போல் அமைந்துள்ள இமயமலைத் தொடர்ச்சியில் உள்ளன. இவை பழுப்பு வர்ணத்தால் காட்டப்பட் டிருக்கின்றன. தென்னிந்தியாவில் உள்ள மேற்குமலைத் தொடர்களும், கிழக்கு மலைத் தொடர்களும் நடுவில் உள்ள விந்தியமலைத் தொடரும் எந்த எந்த வர்ணத்தில் காட்டப்பட் டிருக்கின்றன என்று பாருங்கள்.

படத்தில் வட இந்தியாவில், சிந்து கங்கைச் சமவெளியும், தென் இந்தியாவில் கொங்கண சமவெளியும், கர்நாடக சமவெளியும் பச்சை நிறத்தால் காட்டப்பட்டிருப்பதைக் கவனியுங்கள்.

பீடபூமிகள் சமவெளியை விடச் சற்று உயரமானவை. இந்தியாவின் மத்தியில் தக்ஷிணப் பீடபூமி இருக்கிறது. இது, படத்தில் மஞ்சள் நிறத்தில் காட்டப்பட்டிருக்கிறது.

### கேள்விகள்

1. சமவெளிகள், உயர்ந்த மலைகள், பீடபூமிகள் படத்தில் எந்தெந்த வர்ணத்தால் குறிக்கப்பட்டுள்ளன?
2. தென்னிந்தியாவில் உள்ள மலைத் தொடர்கள் யாவை?
3. இந்தியாவைச் சூழ்ந்துள்ள கடல்கள் எவை?
4. நம் நாட்டிலுள்ள பீடபூமி எங்கே யிருக்கிறது?
5. பூர்த்தி செய்:

———— இந்தியாவின் மதிற்சுவர்போல் அமைந்திருக்கிறது.

இந்தியாவின் கிழக்கே ———— கடல் இருக்கிறது.

சமவெளிகள் ———— நிறத்தால் குறிக்கப்படுகின்றன.

———

## 10. நதிகள்

நதிகள் கோடுகளால் உற்பத்தி ஸ்தானத்தில் மெல்லியதாகவும் உபநதிகளுடன் சேர்ந்து வர வரத் தடித்தும், மேடு பள்ளங்களுக்கு ஏற்றவாறு வளைந்தும் காட்டப்பட்டிருப்பதைக் கவனியுங்கள்.

வட இந்தியாவில், சிந்து, கங்கை, பிரம்மபுத்திரா நதிகள் பாய்கின்றன. இவைகள் இமயமலையில் உற்பத்தியாகின்றன. இவை எப்பொழுதும் தண்ணீரையுடைய ஜீவநதிகள். ஆழமும் அகலமுமுள்ள கங்கை நதி போக்கு வரத்திற்கு மிகவும் பயன்படுகிறது.

தென் இந்தியாவில் மகாநதி, கோதாவரி, கிருஷ்ணா, வடபெண்ணை, தென் பெண்ணை, காவிரி, வைகை, தாமிரபருணி நதிகள் பாய்வதைப் பாருங்கள். இவை மேற்குத்தொடரில் உற்பத்தியாகிக் கிழக்காக ஓடி, வங்காளக் குடாக்கடலில் சங்கமமாகின்றன; கோடையில் வறண்டு விடுகின்றன. அகலமும், ஆழமும் இல்லாத

முக்கிய நதிகள்

நதிகள்

தால் இவை போக்குவரத்திற்குப் பயனுடையவை அல்ல. நதிகளைக் கொண்டு நிலப் பரப்பு எப்படிச் சரிவுற்று இருக்கிறதென்பதைச் சொல்லலாம். தென் இந்தியா மேற்கில் உயர்ந்தும் கிழக்கில் தாழ்ந்தும் இருக்கிறது.

சாதாரணமாக நதிகள் மேற்கிலிருந்து கிழக்காக ஓடும். ஆனால் தபதி, நர்மதை நதிகள் கிழக்கிலிருந்து மேற்காக ஓடுகின்றன. இவைகளை **நதம்** என்கின்றோம். இங்குப் பூமி கிழக்கில் உயர்ந்தும் மேற்கில் தாழ்ந்தும் இருக்கிறது.

நம் இந்தியப் பெருநதிகளின் உற்பத்தி ஸ்தானம், பாயுமிடம், சங்கமமாகுமிடங்கள் முதலிய விவரங்களைப் பின்வரும் அட்டவணையில் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

## இந்தியப் பெரு நதிகளின் அட்டவணை

| வரிசை எண் | நதிகளின் பெயர் | உற்பத்தி ஸ்தானம் | பாயுமிடங்கள் | சங்கமமாகுமிடங்கள் | உபநதி | பயன் |
|---|---|---|---|---|---|---|
| 1 | சிந்து | இமய மலை | பஞ்சாப், சிந்துப் பிரதேசங்கள் | அரபிக் கடல் | ஜீலம், சீனப், ராவி, பியாஸ், சட்லெஜ் | சுக்கூரில் அணைகட்டி பாசனத்துக்குப் பயன்படுத்தி இருக்கின்றனர். |
| 2 | கங்கை | இமய மலையில் கங்கோத்ரி | ஐக்கிய மாகாணங்கள், பீஹார், வங்காளம் | வங்காள விரிகுடா | யமுனை, கோக்ரா | கால்வாய்கள் மூலம் நீர்ப் பாசனம். ஆழமுள்ள பாகம்வரை கப்பல் போக்கு வரத்து |
| 3 | பிரம்மபுத்ரா | இமய மலை | அஸ்ஸாம், வங்காளம் | வங்காள விரிகுடா | | பாசனத்திற்கு |
| 4 | மஹா நதி | தக்ஷிணப் பீடபூமி | ஒரிஸ்ஸா | வங்காள விரிகுடா | | ஹிராகட் அணை பாசனத்திற்கு |
| 5 | கோதாவரி | மேற்குத் தொடர்ச்சிமலையில் நாசிக் என்னுமிடப் | நிஜாம் ராஜ்யம், கோதாவரி ஜில்லா | வங்காள விரிகுடா | வைங்கங்கா, வர்தா | நைஜாம்சாகர் அணை, ராமபாதசாகர் அணை |
| 6 | கிருஷ்ணா | மேற்குத் தொடர்ச்சி மலை | நிஜாம் ராஜ்யம், கிருஷ்ணா ஜில்லா | வங்காள விரிகுடா | துங்கபத்திரை, பீமா | கிருஷ்ணா அணை, பெஜவாடா அணை, துங்கபத்ரா அணை |
| 7 | காவிரி | குடகு நாடு | மைசூர், சேலம், கோயம்புத்தூர், திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் | வங்காள விரிகுடா | பவானி, நொய்யல் அமராவதி | கண்ணம்பாடி அணை, மேட்டூர் அணை, கல்லணை, பெரிய அணை, நீர் வீழ்ச்சிகளில் மின்சாரம் |
| 8 | வைகை | ஏலமலை | மதுரை, ராமநாதபுரம் | மன்னார் குடா | | பெரியாற்றுத் திட்டம் பாசன வசதி |
| 9 | தாமிரபருணி | அகஸ்திய மலை | திருநெல்வேலி | மன்னார் குடா | மணி முத்தாறு | மணிமுத்தாறு அணை, நீர்வீழ்ச்சிகளில் மின்சாரம் |

### கேள்விகள்

1. வட இந்தியாவில் பாயும் நதிகள் எவை?
2. தென் இந்தியாவில் பாயும் நதிகள் எவை?
3. காவிரி நதியிலுள்ள அணைக்கட்டுகள் எவை?
4. தேசப்படத்தில் நதிகள் எவ்வாறு குறிக்கப்படுகின்றன?

### தெரிந்துகொள்

உங்கள் ஊரில் ஓடும் நதியைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து சொல்.

———

## 11. போக்குவரத்துச் சாதனங்கள்

நாம் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் போகவேண்டுமானால் அதற்கு ஒரு பாதை அவசியம். அந்தப் பாதையின் வழியாக மோட்டார்காரிலோ, வண்டியிலோ, ரயிலிலோ நாம் போக வேண்டிய இடத்திற்குப் போய்ச் சேரலாம். அது போல் வேறு ஊருக்குச் சாமான்களை அனுப்பவேண்டியதிருந்தால் லாரிகள் மூலமோ, வண்டிகள் மூலமோ, ரயில் மூலமோ அனுப்ப வேண்டிய ஊருக்கு அந்தச் சாமான்களை அனுப்பலாம். மோட்டார்கார், லாரி, வண்டி முதலியவை செல்லும் பாதைகளைச் சாலைகள் என்றும் ரயில் செல்லும் பாதையை இருப்புப் பாதை என்றும் அழைக்கிறோம். இவை இரண்டும் தரை மார்க்கங்களாகும். இவை தவிர, நீர் மார்க்கம் என்றும் ஆகாய மார்க்கம் என்றும் போக்குவரவிற்குப் பயன்படும் வேறு இரு மார்க்கங்கள் உள்ளன. நீர் மார்க்கத்தில் கப்பல்கள், படகுகள் மூலமும், ஆகாய மார்க்கத்தில் ஆகாய விமானம் மூலமும் நாம் பிரயாணம் செய்யலாம். இப்பொழுது நாம் தரை மார்க்கத்தைப் பற்றி மட்டும் இங்குக் கவனிப்போம்.

**சாலைகள் :** கிராமங்களில் உள்ள சாலைகள் மண் பாதைகளாக இருக்கும். இவை மேடு பள்ளமாகவும் ஒழுங்கில்லாமலும் இருக்கும். இவை பெரும்பாலும் மாட்டு வண்டிகள் செல்லுவதற்கே உபயோகப்படுகின்றன. மழைக் காலங்களில் இப் பாதைகளில் போக்கு வரவு கஷ்டமாக இருக்கும். நகரங்களில் உள்ள சாலைகள் தார், சிமெண்டு முதலிய உறுதியான பொருள்களால் ஒழுங்காக அமைக்கப்பட்டிருக்கின்றன. இப் பாதைகளில் பஸ், லாரி, மோட்டார் முதலியவை போகக்கூடும். சில இடங்களில் கப்பி ரஸ்தாக்களும் போடப்பட்டுள்ளன. இந்த ரஸ்தாக்களை அடிக்கடி பழுது பார்ப்பார்கள்.

இந்தியாவின் முக்கிய சாலைகள் உள்ள படத்தைப் பாருங்கள். சாலைகள் இரு சமதூரக் கோடுகளால் குறிக்கப்பட்டுள்ளன. இந்தச் சாலைகள் நம் நாட்டிலுள்ள முக்கிய நகரங்களை ஒன்றோடொன்று இணைப்பதைக் காணலாம். பெரிய நகரங்களான டில்லி, சென்னை முதலிய இடங்களில் பல சாலைகள் ஒன்று சேருகின்றன.




**இருப்புப் பாதைகள் :** புகை வண்டிகள் செல்லும் பாதைகளை இருப்புப் பாதைகள் என்று சொல்லுகிறோம். அந்தப் பாதைகள் இருப்புத் தண்டவாளங்களால் அமைந்தவை. முக்கிய இருப்புப் பாதைகளைக் காட்டும் நம் தேசப் படத்தைப் பாருங்கள். அவை முட்கம்பிகளைப்போல நீண்ட கோடுகளில் சிறிய குறுக்குக் கோடுகளிட்டுக் காட்டப்பட்டுள்ளன. இவ் விருப்புப் பாதைகள் நாடெங்கும்

பரவி உள்ளன. இவை உணவுப் பொருள்களையும், சாமான்களையும் ஓரிடமிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டு செல்ல மிகவும் உபயோகமாயிருக்கின்றன. இவற்றின் மூலம் வேகமாகவும் பிரயாணம் செய்யலாம்.




படத்தில் டில்லியைப் பாருங்கள். அங்குப் பல இருப்புப் பாதைகள் சந்திக்கின்றன. இவ்வாறு பல இருப்புப் பாதைகள் சந்திக்குமிடத்தை இருப்புப் பாதைச் சந்திப்பு என்று சொல்கிறோம்.

ஒரு நாட்டின் வியாபாரமும் நாகரிகமும் சாலைகள், இருப்புப் பாதைகள் இவற்றின் பெருக்கத்தாலேயே அபிவிருத்தி யடைகின்றன.

## கேள்விகள்

1. சாலைகள் எவ்வாறு தேசப்படங்களில் குறிக்கப்பட்டுள்ளன?
2. இருப்புப் பாதையின் பயன்கள் யாவை?
3. இருப்புப் பாதைச் சந்திப்பு என்றால் என்ன?

## பயிற்சி

படத்தைப் பார்த்து இருப்புப் பாதைச் சந்திப்புகள் நான்கின் பெயர்களை எழுது.

# 12. நகரங்கள்

ஜனத்தொகைக்குத் தகுந்தபடி பட்டணங்கள் புள்ளியாலும், வட்டங்களாலும் குறிக்கப்படுகின்றன. ஒரு லட்சம் ஜனத்தொகைக்குக் குறைந்தவை புள்ளிகளாலும், ஒரு லட்சத்திற்குமேல் ஐந்து லட்சத்திற்குட்பட்டவை வட்டத்தாலும், ஐந்து லட்சத்திற்கு மேற்பட்டவை சதுரத்தாலும் குறிக்கப்படுகின்றன.

கீழ்க்கண்ட நகரங்களைப் படத்தில் பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள். டில்லி, கல்கத்தா, காசி, சென்னை, பம்பாய், கொச்சி.




முக்கிய நகரங்கள்

**டில்லி :** இது யமுனை நதிக்கரையில் இருக்கிறது. இது நம் நாட்டின் அரசாங்கத் தலைநகரம். இங்கு இந்திய அரசாங்க அலுவலகங்கள் எல்லாம் இருக்கின்றன. சட்டசபைகள் இருக்கின்றன. நமது ஜனாதிபதி இங்குதான் வசிக்கிறார். பழைய டில்லியில் செங்கோட்டை இருக்கிறது. டில்லி பண்டைக்காலந் தொட்டே நம் நாட்டின் தலை நகராக விளங்கி வந்திருக்கிறது.

**கல்கத்தா :** இது படத்தில் எங்கிருக்கிறது பாருங்கள். இது ஹூக்ளி நதிக் கரையில் அமைந்திருக்கிறது. இது இந்தியாவின் சிறந்த துறைமுகங்களில் ஒன்று. இதன் அருகில்தான் பெரிய நிலக்கரிச் சுரங்கங்களும், சணல் தொழிற்சாலைகளும் இருக்கின்றன. இது ஜனநெருக்கமுள்ள இடம்; சரித்திரப் பிரசித்திபெற்றது.

**காசி :** இது இந்துக்களின் புண்ணிய க்ஷேத்திரம். யாத்திரிகர்கள் திரள் திரளாக இங்குவந்து ஸ்நான கட்டங்களில் நீராடுகிறார்கள். இதனால் தாங்கள் செய்த

பாவம் தொலையும் என்று நம்புகிறார்கள். இது விஸ்வநாதர் ஆலயத்தால் பிரசித்தி பெற்றது. இங்கு ஒரு சர்வகலாசாலை இருக்கிறது.




காசி—ஸ்நான கட்டம்

சென்னை: இது நமது இராஜதானியின் தலைநகர். ஆதியில் ஒரு குக்கிராமமாக இருந்தது. பிரான்ஸிஸ் டே என்பவரால் கிழக்கிந்தியக் கம்பெனிக்காகச் சந்திரகிரிச் சிற்றரசனிடமிருந்து விலைக்கு வாங்கப்பட்டது. செயற்கைத் துறைமுகத்தால் இது சிறந்து விளங்குகிறது. மேற்குக்கரையில் பம்பாய் நம் தேசத்தின் மேற்கு வாயில்படியாக இருப்பதுபோல் சென்னை நம்தேசத்தின் கிழக்கு வாயில் படியாக இருக்கிறது எனலாம். மாகாணத் தலைமை நிலையங்கள் எல்லாம் இங்குதான் இருக்கின்றன.

கொச்சி: இது மேற்குக் கரையின் தெற்கில் உள்ள ஒரு இயற்கைக் கப்பல் துறைமுகம். இதன் வழியாக மிளகு, கொப்பரை, தேக்கு முதலியன ஏற்றுமதியாகின்றன. இது ஒரு பெரிய கப்பல் தளமாக்கப்படலாம்.

பம்பாய்: இது இந்தியாவின் மேற்கு வாயில்படி என்று அழைக்கப்படுகின்றது. ஆப்ரிக்கா, ஐரோப்பாவிலிருந்து வருபவர்கள் இதன் வழியாகத்தான் நம் நாட்டினுள் புகவேண்டும். இது ஒரு சிறந்த இயற்கைத் துறைமுகம். மேல் நாடுகளை நோக்கியமைந்திருப்பதே இதன் முக்கியத்துவத்துக்குக் காரணம். இதன் பின்னணி நிலம் பருத்திப் பிரதேசம். பம்பாய்ப் பட்டணம் கரையோரமாக உள்ள தீவுகளின் மேலாக அமைந்திருக்கும் அழகான பட்டணம். இது உள்நாட்டோடு இருப்புப் பாதையால் இணைக்கப்பட்டிருக்கிறது. இது தொழிற்சாலைகளாலும், வியாபாரத்தாலும் ஜனநெருக்கமுள்ளது.

## கேள்விகள்

1. நகரங்கள் தேசப் படங்களில் எப்படிக் குறிக்கப்படுகின்றன?
2. டில்லி, கொச்சி, சென்னை, பம்பாய் இவை எப்படிப் பிரசித்திபெற்றவை?
3. கொச்சியின் வழியாக ஏற்றுமதியாகும் பொருள்கள் எவை?

## 13. திசை அறிதல்

சாதாரணமாக ஓரிடத்தின் திசையை அறிய உங்களுக்குத் தெரியும். காலையில் சூரியனைப் பார்த்து நின்று இருகைகளையும் பக்கவாட்டில் நீட்டினல் சூரியன் பக்கம் கிழக்கு; முதுகுப் பக்கம் மேற்கு; வலக் கைப்பக்கம் தெற்கு; இடக்கைப் பக்கம் வடக்கு. இவையே அன்றித் தென்கிழக்கு, தென் மேற்கு, வடகிழக்கு, வடமேற்கு என்னும் நான்கு உபதிசைகளும் உண்டு. ஓரிடத்தின் திசையை அறிய திசையறி கருவியும் இருக்கின்றது.



சூரியனைப் பார்த்துத் திசையை அறிதல்

ஆனல் படத்தில் திசையறிவதற்குப் படத்தைச் சுவரில் மாட்டி, அதன் முன் நின்று, முன் போலவே கையை நீட்டிக்கொள். படத்தின் தலைப்புறம் வடக்கு; அடிப்புறம் தெற்கு; வலக்கைப் பக்கம் கிழக்கு; இடக் கைப்பக்கம் மேற்கு.

தேசப்படங்களிலேயே திசைகளைக் காணக் குறிப்பு ஒன்று இருக்கும். அதைப் பார்த்துத் திசைகளை எளிதில் அறியலாம். படத்தைப் பார்த்து நமது



படத்தில் திசை அறிதல்

நாட்டின் நாற்புற எல்லைகளைச் சொல்லுங்கள்? சென்னை, பம்பாய், கல்கத்தா நகரங்கள் எத்திசையில் உள்ளன? காவிரியின் வடகரையில் உள்ள ஒரு பட்டணத்தைச் சொல்லு?


திசையறி கருவி

பம்பாய் சென்னைக்கு நேர் வடமேற்கில் இருக்கிறது. நாம் ஒரு காக்கையாக இருந்தால் சென்னையிலிருந்து நேர் வடமேற்கில் பறந்து பம்பாயில் இறங்கலாம். இவ்வாறே ஆகாய விமானத்தில் பிரயாணம் செய்தால் பாம்பாயை அடையலாம். ஆனால் சென்னையிலிருந்து புகை வண்டியில் பிரயாணம் செய்தால் முதலில் வடமேற்கிலும், பிறகு வடக்கிலும், மறுபடியும் வடமேற்கிலும் செல்ல வேண்டும். இதற்குக் காரணம் என்ன தெரியுமா? இருப்புப்பாதைகள் தரையின் மேடு பள்ளங்கள், இயற்கையமைப்பு இவைகளை அனுசரித்தே போடப்பட்டு இருக்கின்றன. ஆனால் ஆகாயப்பாதை இவற்றால் பாதிக்கப்படுவதில்லை. மிக உயர்ந்த மலைகளிருந்தால்தான் ஆகாய விமான மார்க்கம் பாதிக்கப்படும்.

### கேள்விகள்

1. திசைகளும் உப திசைகளும் யாவை?
2. தேசப் படத்தில் திசைகளை எப்படி அறிவாய்?
3. ஆகாயவிமான மார்க்கத்தில் செல்வதுபோல் ஒரு பட்டணமிருக்கும் திசைக்கு நேராக ரயில்களில் பிரயாணம் செய்ய முடியாது. என்?

---

## 14. பருவக் காற்றுகளும் மழையும்

ஜூன், ஜூலை, ஆகஸ்டு மாதங்களாகிய கோடை காலத்தில் மேற்கிலிருந்தும், தென்மேற்கிலிருந்தும் காற்று வீசுகிறது. இக்காற்று இந்து மகா சமுத்திரத்திலிருந்து ஒவ்வொரு வருஷமும் குறித்த மாதங்களில் வீசுகிறது. இதற்குத் தென் மேற்குப் பருவக்காற்று என்று பெயர். தென்மேற்குப் பருவக்காற்று கோடை காலத்தில் வீசுவதால் இதற்குக் கோடைப் பருவக் காற்று என்றும் வேறு பெயர் உண்டு. இது விசாலமான இந்து மகா சமுத்திரத்திலிருந்து நீருண்ட மேகங்களைக் கொண்டு வருகிறது. இதனால் மேற்குக் கடற்கரைச் சமவெளியில் கனத்த மழை பெய்கிறது. மேற்குத் தொடர்ச்சி மலைக்குக் கிழக்கே செல்லச் செல்ல மழை குறைவு.

குளிர் காலமாகிய அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாதங்களில் வடக்கிலிருந்தும் வடகிழக்கிலிருந்தும் காற்று வீசுகிறது. இக்காற்றுக்கு வடகிழக்குப் பருவக்காற்று என்று பெயர். இதற்குக் குளிர்ப் பருவக்காற்று என்றும் பெயர். இக்காற்று பெரும்பாலும் தரைப் பக்கத்திலிருந்து வீசுகிறது. அதனால்

இது குளிர்ந்தும் வறண்டும் இருக்கிறது. இக்காற்றினல் கிழக்குக் கரையில் மழை பெய்கிறது. ஆயினும் மேற்குக் கடற் கரையைப்போல இங்கு அவ்வளவு அதிக மழை பெய்வதில்லை. தென்னிந்தியாவில் கோடை காலத்தில் மேற்குக்




கோடை கால மழை




குளிர் கால மழை

கரையில் மழை அதிகம்; குளிர் காலத்தில் கிழக்குக் கரையில் மழை அதிகம். பருவக்காற்ருல் மழை பெறும் பிரதேசங்களில், சில சமயங்களில் பருவக் காற்று தவறி, அதனல் மழையே இல்லாமல் போகும். ஆகவேதான் கர்னடகப் பிரதேசத்தில் ஐந்தாண்டுகளாக மழை பெய்யவில்லை.

### கேள்விகள்

1. தென்மேற்குப் பருவக்காற்று எப்போது வீசுகிறது?
2. இதனல் எப்பாகம் அதிக மழை பெறுகிறது? ஏன்?
3. வடகிழக்குப் பருவக்காற்று எம்மாதங்களில் மழையைக் கொண்டு வருகிறது?
4. இது ஏன் அதிக மழையைக் கொடுப்பதில்லை?

---

## 15. இந்தியாவின் உஷ்ண நிலை

ஓரிடத்தின் உஷ்ணநிலை அது பூமத்திய ரேகையிலிருந்து இருக்கும் தூரம், சமுத்திர மட்ட உயரம், கடலிலிருந்து இருக்கும் தூரம் இவற்றைப் பொறுத்திருக்கிறது. இவற்ருல் உஷ்ணம் எப்படிப் பாதிக்கப்படுகிறதென்பதைப் பார்ப்போம்.

நம் தேசத்தின் பெரும் பகுதி உஷ்ணமண்டலத்தி லிருக்கிறது. அதாவது சூரியனின் செங்குத்தான கிரணங்களைப் பெறும் பூமத்திய ரேகைக்கு அருகில் இருக்கிறது. ஆகவே உஷ்ணமதிகமாக இருக்கிறது.

காற்று உஷ்ணத்தைச் சூரியனிடமிருந்து நேராகப் பெறுவதில்லை. பூமியின் மூலமாகவே பெறுகிறது. ஆகவே பூமியை அண்டி யிருக்கும் காற்று வெப்ப




இந்தியாவின் உஷ்ண நிலை

மடைதல்போல பூமிக்கு உயரத்திலிருக்கும் காற்று வெப்பம் அடைவதில்லை. ஆகவே பூமி மட்டத்திற்கு உயரச் செல்லச் செல்ல வாயுவின் உஷ்ணம் குறைகின்றது. இக்காரணத்தினல்தான் மலைகளின்மீது கோடை வாசஸ்தலங்கள் அமைந்திருக்கின்றன. உதகமண்டலம், கோடைக்கானல் முதலிய இடங்களில் கோடை மாதங்களில்கூடக் குளிர்ச்சியாக இருக்கும். அதனல்தான் இவ்விடத்துக்குக் கோடை காலத்தில் மக்கள் செல்லுகின்றனர்.

சமுத்திரத்திற்கு அருகில் இருக்கும் இடங்களில் கோடையிலும் அதிக வெப்பம் தெரிவதில்லை. ஏன்? பூமி பகலில் உஷ்ண மடைந்திருக்கும்போது கடல் குளிர்ந்திருக்கிறது. அங்கிருந்து வீசும் காற்று பூமிக்குக் குளிர்ச்சியைத் தருகிறது. எனவே உஷ்ணம் தணிந்து காணப்படுகிறது. ஏரியின் எதிர்வாயில் உள்ள கிராமங்களில், ஏரியில் ஜலம் நிரம்பி இருந்தால் கோடையில் வெப்பந்தணிந்து இருப்பதைக் காணலாம். பெரிய ஏரியோ, கடலோ இல்லாத ஊர்கள் இப்பயனைப் பெற முடியாது.

பொதுவாக நம் தேசம் உஷ்ணப் பிரதேசம். ஆயினும் மேற்குறித்தவாறு இடங்களின் உஷ்ணம் மாறுபட்டிருக்கிறது. டில்லியில் உஷ்ணம் அதிகம்; கல்கத்தாவில் உஷ்ணம் குறைவு. சென்னையில் உஷ்ணம் குறைவு; மேலூரில் உஷ்ணமதிகம்; மதுரையில் உஷ்ணம் அதிகம்; கோடைக்கானலில் உஷ்ணம் குறைவு. காரணம் கூறு. உஷ்ண அளவுப் படத்தைப்பார்த்து மற்ற இடங்களைப்பற்றித் தெரிந்து கொள்ளுங்கள்.

**கேள்விகள்**

1. ஓரிடத்தின் உஷ்ண நிலைக்குக் காரணங்கள் எவை?
2. கோடையில் சிலர் மலை வாசஸ்தலங்களுக்குச் செல்லக் காரணம் என்ன?
3. கடற்கரைப் பட்டணத்தைவிட உள்நாட்டுப்பட்டணத்தில் ஏன் உஷ்ணம் அதிகம்?

---

## 16. மலைப் பிரதேசங்கள்

இந்தியாவை மலைப்பிரதேசம், நதிப்பள்ளத்தாக்குப் பிரதேசம், கடற்கரைப்பிரதேசம், தொழிற் பிரதேசம் எனப் பல பிரதேசங்களாகப் பிரித்து அவைகளில் வாழும் மக்களின் வாழ்க்கையையும், கைத்தொழில்களையும் பற்றிக்




இமயமலைப் பிரதேசக் காட்சி

கவனிப்போம். இமயமலைப் பிரதேசமும், மேற்குத் தொடர்ச்சி மலைப்பிரதேசமும் நம் நாட்டில் உள்ள முக்கிய மலைப் பிரதேசங்களாகும்.

**இமயமலைப் பிரதேசம் :** இமயமலை நம் தேசத்தின் எப்பகுதியில் இருக்கிறது பாருங்கள். இது நம் தேசத்திற்குப் பாதுகாப்புச் சுவர்போல அமைந்திருக்கிறது. இது வடக்கிலிருந்து வரும் குளிர்காற்றை நம்நாட்டில் வீசாதபடி தடுக்கிறது; வங்காளக் குடாக்கடல் வழி வீசும் காற்றைத் தடுத்து கங்கைச் சமவெளியில் அதிக மழையைப் பெய்விக்கிறது. இதில் உற்பத்தியாகும் சிந்து, கங்கை, பிரம்மபுத்திரா நதிகளில் எப்போதும் தண்ணீர் ஓடிக்கொண்டிருக்க உதவி புரிகிறது; இது சுமார் 1500 மைல் நீளமும் 150 மைல் அகலமும் உள்ள மலைத்தொடர்களைக் கொண்டது. இமயமலைத் தொடரில் பனிமூடிய சிகரங்கள் பல உள்ளன. ஆகவே தான் இது இமாலயம் என அழைக்கப்படுகின்றது. இமாலயம் என்பதற்குப் பனிவீடு என்பது பொருள். இதன் சிகரங்களுக்குள் மிகவுயர்ந்தது எவரெஸ்ட் சிகரம். டார்ஜிலிங், சிம்லா, நைனிடால் முதலியன இங்குள்ள கோடை வாசஸ்தலங்கள் ஆகும். காஷ்மீரம், நேபாளம், பூடான் முதலியவை இமயமலைப் பிரதேச நாடுகள்.

காஷ்மீரம் மிக அழகிய காட்சிகள் நிரம்பியது. இங்கு ஆடுகள் வளர்த்தலும், பழத் தோட்டங்கள் பயிர் செய்தலும் முக்கியத் தொழில்கள். குளிர்ப் பிரதேசமாகிய இங்குள்ள ஆடுகளுக்கு ரோமங்கள் அடர்த்தியாகவும், நீண்டும் இருக்கும். இங்குள்ளவர் நேர்த்தியான ரோம ஆடைகள் நெய்கின்றனர். காஷ்மீரப் போர்வைகள் பிரசித்தி பெற்றவை. நேபாளத்தில் உள்ள கூர்க்காக்கள் சிறந்த போர்வீரர்கள். கூர்க்காப் படை சிறந்த போர் வீரர் படை ஆகும்.

பூடான் நாட்டு மக்கள் சடை எருமைகள் மீது சாமான்களைக் கொண்டு போய்த் திபெத்தில் வியாபாரம் செய்கின்றனர். சிக்கிம் நாட்டினர் கூலிவேலை செய்தும், மலைமீது வரும் பிரயாணிகளுக்கு வழிகாட்டியும் பிழைக்கின்றனர்.


கூர்க்க வீரன்


சடை எருமை

**மேற்குத் தொடர்ச்சி மலைப்பிரதேசம் :** இது இந்தியாவின் மேற்குக் கடற்கரையோரத்தில் வடக்குத் தெற்காக வியாபித்து இருக்கிறது. வடபகுதியில் தால் கணவாய், போர்கணவாய் இவைகள் உள்ளன. இவற்றின் வழியாகப் பம்பாயிலிருந்து ரயில் பாதைகள் கல்கத்தாவுக்கும் சென்னைக்கும் போகின்றன. மேற்குத் தொடர்ச்சி மலைகளும் கிழக்குத் தொடர்ச்சி மலைகளும் சந்திக்குமிடத்தில் நீலகிரி மலைகள் உள்ளன. நீலகிரி மலையில் உதகமண்டலம், குன்னூர் ஆகிய இரு கோடை வாசஸ்தலங்கள் உள்ளன. நீலகிரிமலைக்குத் தெற்கில் பாலக்காட்டுக் கணவாய் இருக்கின்றது. இதன்வழியே போக்குவரத்து நடைபெறுகின்றது. இக் கணவாய் வழியாகச் சென்னை, கொச்சி, மங்களூர் பாதை செல்லுகிறது. இக்கணவாய்க்குத் தெற்கில் உள்ளது யானைமலை. இங்கு யானைகள் அதிகம். இதற்குத் தெற்கில் ஏலக்காய் மலை உள்ளது. இங்கு ஏலம் அதிகம் பயிரிடும் நிலங்கள் உள்ளன. ஏலமலையின் கிழக்குச்சரிவில் வைகையும், தாமிரபருணியும், மேற்குச்சரிவில் பெரியாறும் உற்பத்தியாகின்றன. யானைமலைக்குக் கிழக்கில் பழனிமலை இருக்கிறது. பழனி மலையில்தான் பழனி ஆண்டவர் சந்நதி இருக்கிறது. பழனி மலையில் உள்ள கோடை வாசஸ்தலத்துக்குக் கோடைக்கானல் என்று பெயர். மழை அதிகம் பெறும் இப் பிரதேசத்தில் அடர்ந்த காடுகள் உள்ளன. இங்குள்ளவர்கள் மரம் வெட்டுதல், யானைகளைப் பழக்கி மரங்களைக் கொண்டு போதல் முதலிய தொழில்

களில் ஈடுபட்டு இருக்கின்றனர். ரப்பர்த் தோட்டங்கள் உள்ள இடங்களில் ரப்பர்ப் பால் சேகரித்தல் முக்கியத் தொழில் ஆகும்.



ரப்பர்ப் பால் சேகரித்தல்

நீலகிரி மலையில் வசிக்கும் பூர்வீகக்குடிகள் தோடர்கள். இவர்கள் யூகலிப்டஸ் மரத்திலிருந்து யூகலிப்டஸ் தைலம் எடுக்கிறார்கள். மலைச்சரிவுகளில் வசிப்பவர்கள் காப்பி, தேயிலை, ஏலக்காய் பயிரிடுகின்றனர். இவைகளுக்கு மழை



தோடர்கள்

வேண்டும். ஆனால் வேரில் தண்ணீர் தங்கக் கூடாது. தேயிலைச் செடியின் இலைகளையே பக்குவமாகப் பறித்துப் பதம் செய்து தேநீர் தயாரிக்கிறார்கள். காப்பிச் செடியின் கொட்டைகளைப் பறித்து, வறுத்துப் பொடிசெய்து பயன் படுத்துகிறோம். மைசூர், குடகு, நீலகிரி மலைச்சரிவுகளில் காப்பிப் பயிர் அதிகம்.

### கேள்விகள்

1. இமயமலைப் பிரதேசம் எங்கு வியாபித்து இருக்கிறது?
2. இமயமலையினுல் நம் நாட்டிற்கு என்ன அனுகூலம்?
3. இமயமலையின் உன்னத சிகரம் எது?
4. இமயமலையில் உற்பத்தியாகும் நதிகள் எவை?
5. இமயமலையிலுள்ள சில கோடைவாசஸ்தலங்கள் எவை?
6. சிக்கிம் நாட்டினரின் முக்கிய தொழில் எது?
7. மேற்குத் தொடர்ச்சி மலையிலுள்ள கணவாய்கள் எவை?
8. உதகமண்டலம், கோடைக்கானல் எங்குள்ளன?
9. மேற்குத் தொடர்ச்சி மலைவாசிகளின் முக்கிய தொழில்கள் யாவை?

---

## 17. ஜீலம் நதிப் பள்ளத்தாக்கு—காஷ்மீர நாடு

ஜீலம் நதி சிந்து நதியின் உபநதிகளில் ஒன்ருகும். இது இமயமலையில் உற்பத்தியாகிறது. இது உற்பத்தியாகும் பிரதேசத்தில்தான் காஷ்மீரம் இருக்கிறது. காஷ்மீரம் இருக்கும் இடத்தைப் படத்தைப் பார்த்துக் கண்டுபிடியுங்கள். இது இருக்குமிடம் ஒரு ஏரிப் பள்ளத்தாக்கு ஆகும். ஆகையால் இது மிகவும் குளிர்ச்சியாக இருக்கும். இங்குள்ள இயற்கைக் காட்சிகள் பார்ப்பதற்கு அழகாக இருக்கும். கண்ணைக்கவரும் பலவித வர்ண மலர்களையும் வெண்பனி மலைகளையும் இங்கே காணலாம்.

இயற்கைக் காட்சியுடன் விளங்கும் இதை இந்தியாவின் ஸ்விட்ஸர்லாந்து எனலாம். ஸ்விட்ஸர்லாந்து ஐரோப்பாவில் இருக்கிறது. அது இயற்கைக் காட்சிகளால் சிறந்தது. காஷ்மீரத்தில் கோடையில் வெப்பம் குறைவு. குளிர் காலத்தில் சிறிது மழைபெய்கிறது. இச்சீதோஷ்ண நிலை ஆப்பிள், திராட்சை போன்ற பழத்தோட்டங்களுக்கு ஏற்றது. இங்குப் புஷ்பத்தோட்டங்களும் அதிகம்.

காஷ்மீர் சமவெளியில் கோதுமை பயிர் செய்யப்படுகின்றது. பசும் புல் தரைகளில் ஆடுகள் மேய்க்கப்படுகின்றன. ரோமத்தைக்கொண்டு வேலைப்பாடுள்ள கம்பளங்கள் நெய்வதிலும் நேர்த்தியான சால்வைகள் செய்வதிலும் இங்குள்ளவர்கள் திறமையுடையவர்கள்; மரப்பொம்மைகள் பெட்டிகள் செய்வதிலும் சிறந்தவர்கள். பயிர்செய்தல், ஆடுமாடுகள் மேய்த்தல், கம்பளம் நெய்தல், பொம்மைகள் செய்தல் முதலியவை இங்கு நடைபெறும் முக்கியத் தொழில்கள்.

இங்கு வசிப்பவர்கள் பலசாலிகளாகவும், அழகுவாய்ந்தவர்களாகவும் இருக்கிருர்கள். காஷ்மீரத்தில் பல அழகிய ஏரிகளுண்டு. காஷ்மீரிகளில் சிலர் இந்த ஏரிகளில் படகு வீடுகளில் வசிக்கிருர்கள். இங்குள்ளவர்கள் படகுகளிலேயே மிதக்கும் தோட்டங்களும் அமைப்பர்.

காஷ்மீரத்தின் தலைநகர் ஸ்ரீநகர். இது ஜீலம் நதிக்கரையில் இருக்கிறது. இங்குக் காஷ்மீர அரசாங்கக் காரியாலயங்கள் இருக்கின்றன.

### கேள்விகள்

1. காஷ்மீரம் எங்கே இருக்கிறது ?
2. காஷ்மீரம் எப்படிப்பட்ட சீதோஷ்ண முடையது ?
3. காஷ்மீரிகளின் முக்கிய தொழில்கள் எவை ?
4. காஷ்மீரத்தின் தலைகர் எது?
5. காஷ்மீரத்தை இந்தியாவின் ஸ்விட்ஸர்லாந்து என்று கூறக் காரணம் என்ன ?

### செய்துபார்

காஷ்மீரக் காட்சிப்படங்களைச் சேகரித்து ஒரு 'ஆல்ப'மாக ஒட்டு

---

## 18. சிந்து நதிப் பள்ளத்தாக்குப் பிரதேசம்

படத்தில் இப்பிரதேசத்தைப் பாருங்கள். சிந்து நதியின் உபநதிகளான ஜீலம், சீனப், ராவி, பியாஸ், சட்லஜ் என்னும் ஐந்து நதிகள் பாய்வதால் அப்பிர




சிந்து சமவெளி

தேசம் பஞ்சாப் என அழைக்கப்படுகின்றது. சிந்து பஞ்சாப் மாகாணங்கள் மழையற்ற பிரதேசங்கள். இந்த நதி பாயாவிட்டால் இவை பாலை நிலங்களாகவே மாறி விடும். ஆகவே சிந்து மாகாணத்தைச் சிந்து நதியின் கொடை என்

பார்கள். இங்குக் கோதுமை, நெல், பருத்தி சாகுபடிசெய்கின்றனர். சுக்கூர் என்னுமிடத்தில் இந் நதியின் குறுக்கே ஓர் அணை கட்டப்பட்டுள்ளது.



சுக்கூர் அணைக்கட்டு

பஞ்சாபின் மேற்குப்பாகம் பாகிஸ்தானுடன் இணைக்கப்பட்டு விட்டது. பஞ்சாபில் சீக்கியர் இருக்கின்றனர். இவர்கள் சிறந்த போர்வீரர்கள். கூர்க்கப் படையைப்போல் சீக்கியப்படையும் முக்கியம் வாயந்தது. அமிர்தசரஸ் சீக்கியரின் புண்ணிய ஸ்தலமாகும். அமிர்தசரஸிலுள்ள பொற்கோயில் மிகவும் அழகானது. சீக்கிய மதஸ்தாபகர் குருநானக் என்பவர். சீக்கியர்களுடைய வேத புஸ்தகம்



அமிர்தசரஸில் உள்ள சீக்கியரின் பொற் கோயில்



சீக்கிய வீரன்

ஆதிக்கிரந்தம். சிந்துவும் பாகிஸ்தானின் ஒரு பகுதியே. இதில் உள்ள கராச்சி சிறந்த துறைமுகம். கராச்சி பாகிஸ்தானின் தலைநகர். இங்கு மிகப்பெரிய விமான நிலையம் இருக்கிறது.

பஞ்சாப்பில் ஹாரப்பாவிலும், சிந்துவில் மொகஞ்சோதாரோவிலும் புதையுண்ட நகரங்கள் தோண்டி எடுக்கப்பட்டிருக்கின்றன. இவை 5000 ஆண்டுகளுக்கு முன் சிறந்திருந்த நம் முன்னோரின் நாகரிகச் சின்னங்களாக விளங்குகின்றன.

### கேள்விகள்

1. சிந்து நதி எந்த மாகாணங்களின் வழியாகப் பாய்கிறது?
2. சிந்து மாகாணத்தைச் சிந்துவின் கொடை என்பதன் அர்த்தமென்ன?
3. பஞ்சாபில் பாயும் நதிகள் எவை?
4. சிந்து நதிப் பிரதேசத்தின் முக்கிய விளைபொருள்கள் எவை?
5. பாகிஸ்தானின் தலை நகர் எது?
6. அமிர்தசரஸ் எவ்வாறு முக்கியமானது?

---

## 19. கங்கைச் சமவெளிப் பிரதேசம்

படத்தில் கங்கைநதி எங்கு உற்பத்தியாகி எந்த வழியாகப் பாய்ந்து கடலில் சங்கமமாகிறது பாருங்கள். கங்கை நதிச் சமவெளியை மூன்று பாகங்களாகப் பிரிக்கலாம். அவை மேல்பாகம், மத்திய பாகம், டெல்டாப் பாகம் என்பனவாகும்.




கங்கைச் சமவெளி

**மேல்பாகம்:** இதில் நம் நாட்டின் தலைநகரான டில்லி இருக்கிறது. டில்லி யமுனைக் கரையில் இருக்கிறது. ஐக்கியமாகாணங்களும் இப்பகுதியில் அடங்கும்.

இவ்விடங்கள் கோதுமை, கரும்பு முதலிய பயிர்களுக்கு ஏற்ற சீதோஷ்ண முடையவை. இங்குள்ள ஆக்ரா நகரத்தில் உலகப் பிரசித்திபெற்ற **தாஜ்மஹால்** கட்டிடம் இருக்கிறது.

யமுனையும் கங்கையும் கலக்குமிடத்தில் **அலகாபாத்** என்னும் நகரம் இருக்கிறது. இதுதான் **பிரயாகை** என்னும் புண்ணிய ஸ்தலமாகும். இங்கு ஒவ்வொரு



தாஜ்மஹால்

வருடமும் நடக்கும் பெரிய திருவிழாவுக்கு யாத்திரிகர்கள் கூட்டங் கூட்டமாக வருவது வழக்கம்.

**மத்தியபாகம்:** கங்கை நதியின் மத்திய பாகத்தில் பல உப நதிகள் வந்து கலக்கின்றன. பீகார் மாகாணம் இப்பாகத்தில் அடங்கி இருக்கிறது. இது செழிப்புள்ள பிரதேசம். இங்கு மழையும் அதிகம். ஆகையால் இங்கு நெல், கரும்பு, வாழை முதலியவை ஏராளமாகப் பயிர் செய்யப்படுகின்றன. பீகார் மாகாணத்தின் தலைநகராகிய பாட்னு சரித்திரப் பிரசித்திபெற்றது. இது அரிசிக்குப் பெயர்போன இடம். கங்கை நதிக்கரையில் **காசி** என்னும் புண்ணிய ஸ்தலம் இருக்கிறது. இங்குள்ள காசி விசுவநாதர் ஆலயம் பிரசித்திபெற்றது.

**டெல்டாப்பாகம்:** கங்கையின் டெல்டாப் பகுதியில் பிரம்மபுத்திரா நதி வந்து கலக்கிறது. இப்பிரதேசம் மிகவும் செழிப்புள்ளது. தென் மேற்குப் பருவக்காற்றினல் இப்பிரதேசத்தில் மழை மிகவும் அதிகமாகப் பெய்கிறது. இங்கு ஜன நெருக்கம் அதிகம். நெல், கரும்பு, சணல், புகையிலை முதலியவை இப்பிரதேசத்தில் பயிர் செய்யப்படுகின்றன.

இங்குக் கங்கையின் கிளைநதியான ஹூக்ளி பாய்கிறது. ஹூக்ளியின் கிழக்குக் கரையில் **கல்கத்தா** நகரமும், மேற்குக்கரையில் **ஹௌரா** நகரமும் இருக்

கின்றன. ஹௌரா இரும்பு எஃகுத் தொழிற்சாலைக்குப் பேர்போனது. கல்கத்தா உலகத்தின் பெரிய நகரங்களில் ஒன்று. இது சிறந்த துறைமுகமாகும். 1911ஆம்



ஹௌரா நதியின்மேல் உள்ள இரும்புப் பாலம்

வருஷம் வரையில் இது இந்தியாவின் தலைநகரமாகவே இருந்தது. ஹூக்ளி நதியின்மேலுள்ள இரும்புப் பாலம் மிகவும் சிறந்தது. இது கல்கத்தாவையும் ஹௌராவையும் சேர்க்கிறது.

**கேள்விகள்**

1. தாஜ்மஹால் எங்கே இருக்கிறது?
2. பாட்னா எதற்குப் பெயர்போனது?
8. கங்கையின் டெல்டாப் பிரதேசத்தில் ஜன நெருக்கம் அதிகமாக இருக்கக் காரணம் என்ன?

---

## 20. மத்திய இந்திய நதிகள் பாயும் பிரதேசம்

இங்குப் பாயும் நதிகள் எவை என்று படத்தில் பாருங்கள். தபதி நருமதை நதிகள் விந்திய சாத்பூரா மலைகளுக்கு இடையில் பாய்கின்றன. இவை கடலில் கலக்குமிடத்தில் பாறைப்பிரதேசமாக இருப்பதால் டெல்டாக்கள் இல்லை.

இந்நதிகளின் முகத்துவாரத்தில் புரோச், சூரத் நகரங்களுள்ளன. குப்தர்கள் காலத்தில் இவை துறைமுகங்களாக இருந்தன. கராச்சி பாகிஸ்தான் பகுதியில் சேர்க்கப்பட்டதால் மறுபடியும் சூரத் சிறந்த துறைமுகப் பட்டினம்

ஆக்கப்படலாம். நருமதை நதிக்கரையில் ஜபல்பூர் இருக்கிறது. இது ஒரு இராணுவ ஸ்தலமாகும். காடுகளும், பருத்தி வயல்களும் இப்பிரதேசத்தில் அதிகம்.

மகாநதி எக்கடலில் சங்கமமாகின்றது பாருங்கள். இது எம்மாகாணத்தில் உள்ளது? இங்கு நெல், கரும்பு சாகுபடி ஆகின்றன. இங்குப் புவனேஸ்வரமும், பூரியும் சிறந்த நகரங்கள். பூரியில் உள்ள ஜகந்நாதர் ஆலயம் பிரசித்திபெற்று விளங்குகிறது.

### கேள்விகள்

1. மத்திய இந்தியாவில் பாயும் நதிகள் எவை?
2. இந் நதிகள் பாயுமிடத்தில் ஏன் டெல்டாக்கள் இல்லை?
3. இப்பிரதேசத்திலுள்ள முக்கியமான நகரங்கள் எவை?

---

## 21. காவிரி நதிப் பள்ளத்தாக்கு

காவிரி தட்சிண கங்கை என அழைக்கப்படுகின்றது. இது குடகுநாட்டில் உற்பத்தியாகி மைசூரில் பாய்கிறது. இங்கு இதில் கண்ணம்பாடி அணை என்னும் கிருஷ்ண ராஜசாகர் அணைகட்டி இருக்கிறார்கள். காவிரி நம் மாகாணத்தில்



சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சி

நுழையும்போது சிவசமுத்திர நீர்வீழ்ச்சி ஏற்படுகிறது. இதில் மின்சார உற்பத்தி செய்து, பல வகையில் பயன் படுத்துகின்றனர். சேலத்தில் மேட்டூருக்கு அருகில்

அணைகட்டி நீரைத் தேக்கிப் பாசனத்திற்குப் பயன்படுத்தியிருக்கின்றனர். மற்றும் இதில் தண்ணீரை உயரத்திலிருந்து விழச்செய்து மின்சாரமும் உற்பத்தி செய்கின்றனர். டெல்டாப் பாகத்திலும் பல அணைகளைக் கட்டி இருக்கின்றனர்.



மேட்டூர் அணைக்கட்டு

காவிரிக் கரையில் உள்ள திருச்சிராப்பள்ளி சரித்திரப் பிரசித்தி வாய்ந்தது. இங்கு ஒரு கோட்டை இருக்கிறது. இங்கு உச்சிப் பிள்ளையார் கோயில் இருக்கிறது.




திருச்சிராப்பள்ளி மலைக் கோட்டை

இங்குக் காவிரியில் கொள்ளிடம் என்ற கிளை நதி வடபாகத்தில் பிரிகிறது. அது மீண்டும் இடையில் ஸ்ரீரங்கம் என்ற தீவை உண்டுபண்ணிப் பின்னர் கூடுகிறது. ஸ்ரீரங்கம் ஒரு வைணவ புண்ணிய க்ஷேத்திரம்.

டெல்டாப் பாகத்தில் தஞ்சாவூர் இருக்கிறது. தஞ்சாவூர் தென் இந்தியாவின் நெல் களஞ்சியம் என்று அழைக்கப்படுகிறது. இது ஒரு சரித்திரப் பிரசித்திபெற்ற நகரம். இது புண்ணிய க்ஷேத்திரம். இது இராஜராஜ சோழனால் கட்டப்பட்ட



தஞ்சைப் பிருகதீஸ்வரர் கோயில்

பிரகதீஸ்வரர் ஆலயத்தால் பிரசித்தி பெற்றது. இங்கு நெல், கரும்பு, வாழை ஏராளமாகப் பயிராகின்றன. காவிரிப் பாய்ச்சலால் 'சோழவளநாடு சோறு உடைத்து' என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிறது.

## கேள்விகள்

1. தக்ஷிண கங்கை எது?
2. காவிரியில் எங்கெங்கு அணைகள் கட்டப்பட்டுள்ளன?
3. தென் இந்தியாவின் நெற்களஞ்சியம் எது?
4. கொள்ளிடம் என்று எதற்குப் பெயர்?
5. பிருகதீஸ்வரர் ஆலயம் எங்குள்ளது?
6. சிவசமுத்திர நீர் வீழ்ச்சி எங்கு ஏற்பட்டிருக்கிறது? எப்படிப் பயன் படுகிறது?

# 22. தென்னிந்தியாவின் வேறு சில நதிப் பிரதேசங்கள்

வைகையின் போக்கைப் படத்தில் பாருங்கள். வைகைக் கரையில் மதுரை இருக்கிறது. இது ஒரு புண்ணிய க்ஷேத்திரம். மதுரை பாண்டிய நாட்டின் தலை நகராக இருந்தது. இது தமிழ்ச் சங்கத்தின் இருப்பிடம். பெரியாற்றுத் திட்டத்தால் இந்நதியில் நீர்ப்பெருக்குண்டாகிறது. இது மதுரை, இராமநாதபுரம் ஜில்லாக் களுக்குப் பாசனத்திற்கு உதவுகிறது.



குற்றாலம் நீர்வீழ்ச்சி

பெரியாறு மேற்குத்தொடர்ச்சி மலையில் ஏலமலைப் பிரிவின் மேற்குச்சரிவில் உற்பத்தியாகிறது. குறுகிய சமவெளியின் வழியாக அரபிக்கடலில் சங்கமமாகிறது. இதை மலை அடிவாரத்தின் பள்ளத்தில் தேக்கி மலையைக் குடைந்து குடைவுவழி

யாகத் தண்ணீரைக் கொண்டுபோய் ஏலமலையின் கிழக்குச்சரிவில் உற்பத்தியாகும் வைகையாற்றில் விழச் செய்திருக்கின்றனர். இதனால் வைகையில் பெருக்குண்டாகிறது. இதற்குத்தான் பெரியாற்றுத் திட்டம் என்று பெயர்.

தாமிரபருணி திருநெல்வேலி ஜில்லாவில் பாய்கிறது. இந்நதியின் உபநதியாகிய மணிமுத்தாற்றில் ஓர் அணைகட்டி நீரைத்தேக்கிப் பாசனத்திற்குப் பயன்படுத்துகின்றனர். பாபநாசம் நீர் வீழ்ச்சி, மின்சாரத்திற்குப் பயன்படுகிறது. இதன் உபநதியாகிய சிற்றாற்றில் தென்காசிக் கருகில் குற்றாலம் நீர்வீழ்ச்சி இருக்கிறது.

கோதாவரி, கிருஷ்ணா நதிகள் எங்குப் பாய்கின்றன என்று படத்தில் பாருங்கள். கோதாவரி, கோதாவரி ஜில்லாவில் பாய்கிறது. இங்கு விசாகப்பட்டினம் என்னும் சிறந்த துறைமுகம் இருக்கிறது. கிருஷ்ணா, கிருஷ்ணா ஜில்லாவில் பாய்கிறது. இதில் விஜயவாடாவில் அணைகட்டப்பட்டு இருக்கிறது. இந்நதிகள் பாயும் பிரதேசம் செழிப்பு வாய்ந்தவை. இங்கு நெல், கரும்பு, புகையிலை அதிகமாகப் பயிர் செய்கின்றனர்.

வடபெண்ணை, மைசூர்ப் பீடபூமியில் உற்பத்தியாகி, நெல்லூர் ஜில்லா வழியாகப் பாய்கிறது. இப்பிரதேசம் பசுக்களுக்குப் பெயர்போனது; இங்கு நெல் விளைவு குறைவு. இங்கு அபிரகம் கிடைக்கிறது. இதைக் கண்ணாடிக்குப் பதில் உபயோகிக்கலாம்.

பாலாறு செங்கற்பட்டு, வடாற்காடு ஜில்லா வழியாகப் பாய்கின்றது. இந்த ஆறு கோடையில் வறண்டு கிடக்கும். இது மழைக்காலத்தில் ஏரிகளை நிரப்ப உதவுகிறது. பாலாற்றங்கரையில் கோயில்கள் நிறைந்த காஞ்சீபுரம் இருக்கிறது. இது ஆதியில் பல்லவர்களின் தலைநகராக விளங்கிற்று. காஞ்சிக்கு 12 மைல் தொலைவிலுள்ள திருமுக்கூடல் என்னுமிடத்தில் செய்யாறு இதனுடன் கலக்கிறது.

தென் பெண்ணை, தென் ஆற்காடு வழியாகப் பாய்கிறது. இந்நதியும் கோடைக்காலத்தில் வறண்டு விடுகிறது. இது நீர்ப்பாசனத்திற்கு அதிகமாக உதவுவதில்லை. தென் பெண்ணையின் கரையிலுள்ள சிதம்பரம் நடராஜர் ஆலயத்தால் பிரசித்தி பெற்றது.

## கேள்விகள்

1. வைகை பாயும் ஜில்லாக்கள் எவை?
2. வைகை எங்கு உற்பத்தியாகிறது?
3. பெரியாற்றுத் திட்டமென்பது என்ன?
4. குற்றாலம் நீர் வீழ்ச்சி எந்நதியில் ஏற்படுகிறது?
5. மணிமுத்தாறு எங்குள்ளது?
6. நெல்லூர் ஜில்லா எதற்குப் பேர்போனது?

---

# 23. பீடபூமிப் பிரதேசம்—பம்பாய்

விந்தியமலைக்குத் தெற்கிலும், மேற்கு, கிழக்குத் தொடர்ச்சி மலைகளுக்கு இடையிலும் உள்ள பீடபூமிப் பிரதேசமே தட்சிணப் பீடபூமிப் பிரதேசம் ஆகும். இதன் வடபாகத்தில் பம்பாய் மாகாணம் அடங்கும். இதன் பெரும் பகுதி கரிசல் மண் பிரதேசமாகும். இங்குப் பாயும் நதிகளைப் பார்த்து இங்குப் பூமி எப்பக்கம் தாழ்ந்து இருக்கிறது எனப் பாருங்கள். இங்கு மழை குறைவு; வெப்பம் அதிகம்.

கரிசல் மண் ஈரத்தைக் காக்கும். இங்குள்ள சீதோஷ்ணமும், கரிசல் மண் வளமும் பருத்தி விளைவிற்கு ஏற்றதாக இருக்கின்றன. பருத்திச் செடியிலிருந்து பஞ்சை எடுப்பதும், பருத்தித் தொழிற் சாலைக்கு அனுப்புவதும் இங்கு நடைபெறும் முக்கியத் தொழில்கள் ஆகும். இப்பிரதேசத்தில் அநேக பருத்தி நெசவாலைகள் இருக்கின்றன. ஆமதாபாத், ஷோலாப்பூர், பம்பாய் முதலிய இடங்களில் பல பருத்தி ஆலைகள் உள்ளன. இங்குத் தயார் செய்யப்படும் நூலும், துணியும் உள்நாட்டிலேயே பெரும் பகுதி பயன் படுகிறது.

பருத்திக்கொட்டை மாட்டிற்கு நல்ல தீனியாகின்றது. இது பசுக்கள் நல்ல பால் கொடுக்க உதவும் என்பார்கள். பருத்தித் துறைமுகமாகிய பம்பாய், கடற்கரையை அடுத்த தீவின்மேல் அமைந்திருக்கிறது.

இப்பீடபூமிப் பிரதேசத்தின் வடகிழக்குப் பகுதி உலோகங்கள் நிறைந்த பிரதேசம். அதனால் இங்குச் சுரங்கவேலை நடைபெறுகிறது.

**கேள்விகள்**

1. தக்ஷிணப் பீடபூமியின் பெரும்பகுதி எத்தகைய மண் வளமுடையது? இது எப் பயிருக்கு ஏற்றது?
2. பருத்தித் துறைமுகம் என்று எதற்குப் பெயர்?
3. பருத்தி ஆலைகள் உள்ள சில இடங்களை எழுது.

---

# 24. பீடபூமிப் பிரதேசம்—தென்பாகம்

இதில் ஹைதராபாத்தின் தென்பாகமும், கடப்பை, கர்நூல், பல்லாரி அனந்தப்பூர் ஜில்லாக்களும், மைசூர்ப் பீடபூமியும் அடங்கும்.

கடப்பை, கர்நூல், அனந்தப்பூர் ஜில்லாக்களில் மழை குறைவு; கிணற்றுப் பாசனம் அதிகம். இங்குப் பருத்தி விளைவிக்கப் படுகிறது. ஆடுகள் மேய்ப்பதும் முக்கியமான தொழில். கடப்பை,பலகைக் கற்களுக்குப் பெயர் போன இடம். பல்லாரி ஜில்லாவில் பிரசித்தி பெற்ற விஜய நகரத்தின் அழிந்த சின்னங்கள் இருக்கின்றன. அனந்தப்பூர், தர்மாவரம் பட்டுச் சேலைக்குப் பெயர் போனது.

ஹைதராபாத்திலும் மழை குறைவுதான். ஆனாலும், கோதாவரி கிருஷ்ணை நதிகளில் அணைகள் கட்டிப் பாசனத்திற்குப் பயன் படுத்தி இருக்கின்றனர். இங்குப் பெரும் பகுதியில் புன்செய்த் தானியங்களாகிய உளுந்து, கடலை, துவரை பயிரிடப்படுகின்றன. இங்கு வைரச் சுரங்கங்கள் இருக்கின்றன. கோல்கொண்டா வைரச் செதுக்கு வேலையில் சிறந்து விளங்குகின்றது.



மைசூர் அரண்மனை

மைசூர், துங்கபத்திரா, காவிரி நதிகளால் செழிப்படையும் பீடபூமிப்பிரதேசம். இங்குச் சந்தன மரக்காடுகள் அதிகம். இங்கு யானைகள் விசேஷம். யானைகளைப் பழக்கி மரங்களை இழுத்துச் செல்ல உபயோகிக்கின்றனர்.



கோலார் தங்கச் சுரங்கம்

மலைச்சரிவுகளில் காப்பித் தோட்டங்களை வைத்து இருக்கின்றனர். இப் பிரதேசத்தில் ஜெர்சோப்பா, சிவசமுத்திர நீர்வீழ்ச்சிகளால் மின்சாரத்தை உற்பத்தி செய்து விளக்கெரிக்கவும், இயந்திரங்கள் இயக்கவும் பயன் படுத்துகின்றனர். இயற்கைக் காட்சிகள் நிறைந்த மைசூர், இரவில் மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு இந்திர லோகம் போல் விளங்குகின்றது.



காப்பிச் செடி

கோலாரில் தங்கச்சுரங்கம் இருக்கிறது. இங்குத் தங்கம் வெட்டி எடுக்கிறார்கள். பத்ராவதி, இரும்பு எஃகுத் தொழிற் சாலைக்குப் பெயர் போனது. மூங்கிலால் காகிதம் செய்யும் தொழிற்சாலைகளும் பல இருக்கின்றன. இங்குச் சோப்பு செய்தலும் முக்கியத் தொழில். பெங்களூரில் விஞ்ஞான ஆராய்ச்சி நிலையம் ஒன்று இருக்கிறது.

### கேள்விகள்

1. தக்ஷிண பீடபூமியின் தென் பாகத்தில் உள்ள ஜில்லாக்கள் எவை?
2. கடப்பை, பல்லாரி, அனந்தப்பூர் எப்படிப் பிரசித்தி பெற்றவை?
3. கோல்கொண்டாவில் என்ன தொழில் நடைபெறுகிறது?
4. மின்சாரம் மைசூர் மக்களுக்கு எப்படிக் கிடைக்கிறது?
5. பத்ராவதியில் என்னென்ன தொழில்கள் நடைபெறுகின்றன?
6. கோலார் எப்படி முக்கியமானது?

---

## 25. மேற்குக் கடற்கரைச் சமவெளி

இச் சமவெளியின் வடபாகம் கோங்கணச் சமவெளி. தென் பாகம் மலையாளக் கரை. இச்சமவெளி குறுகலானது. மேற்குத் தொடர்ச்சி மலை கடற்கரைப் பக்கம் அதிகமாகச் சரிந்திருப்பதே இதற்குக் காரணம். இப்பகுதி தென் மேற்குப் பருவக் காற்றால் அதிக மழையைப் பெறுகிறது. சில இடங்களில் இங்குக்

கடல் நீர் உள் நாட்டில் நுழைந்து கால்வாய்களாக ஓடுகின்றது. இவற்றிற்கு உப்பங்கழிகள் என்று பெயர். இவை போக்கு வரவிற்குப் பயன்படுகின்றன.

இங்குத் தென்னந் தோப்புகள் அதிகம். இங்குக் கொப்பரை தயாரித்தல், எண்ணெய் ஆட்டுதல், கயிறு திரித்தல் முதலிய தொழில்கள் நடைபெறுகின்றன. மங்களூர் ஓடு செய்யும் தொழிலுக்குப் பெயர்போனது.



தேக்குமரங்கள்



மலையாளக்கரையிலுள்ள உப்பங் கழிகள்

மலைச் சரிவுகளில் மிளகு, ஏலம், வாசனைத்திரவியங்கள் பயிராகின்றன. காடுகளில் தேக்கு, கருங்காலி, சால் மரங்கள் விசேஷம். மரம் வெட்டுந் தொழில் இங்கு அதிகமாக நடைபெறுகிறது. திருவாங்கூரில் ரப்பர் மரங்கள் அதிகம். இங்கு ரப்பர்ப்பால் எடுத்தலும், காய்ச்சுதலும் முக்கியத் தொழில்களாகும். இங்குத் தந்தங்களில் சித்திர வேலையும் செய்கின்றனர். சம நிலங்களில் நெல், மா, பலா, வாழை பயிர் செய்கின்றனர்.

கடற்கரையில் உள்ளவர்கள் மீன் பிடிக்கின்றனர். தென் கன்னடத்தில் கன்னட பாஷையும், மலையாளம், கொச்சி, திருவாங்கூரில் மலையாளமும் பேசுகின்றனர். இப் பிரதேசத்திற்குப் பாலக்காட்டுக் கணவாய் வழியாகச் சென்னையிலிருந்து இருப்புப் பாதை போடப்பட்டு இருக்கிறது. இவ்வாறு மேற்குச் கரைச் சமவெளி கிழக்குக் கரைச் சமவெளியுடன் இணைக்கப்பட்டிருக்கிறது.

மங்களூர், கள்ளிக்கோட்டை, கொச்சி முதலியவை இங்குள்ள சிறந்த துறைமுகங்கள். மலையாளத்தில் உள்ளவர் மலையாளிகள். மலையாள முகம்மதியர்கள் மாப்பிள்ளைமார் என அழைக்கப்படுகின்றனர்.

### கேள்விகள்

1. மேற்குக் கடற்கரைச் சமவெளி என்று எதற்குப் பெயர்?
2. இச்சமவெளி ஏன் குறுகி இருக்கிறது?
3. உப்பங்கழிகள் என்றால் என்ன?
4. இப்பிரதேசத்தின் முக்கியமான பயிர்வகைகள் எவை?
5. இங்குள்ளவர்களின் முக்கியத் தொழில்கள் எவை?
6. இது கிழக்குக் கடற்கரைச் சமவெளியுடன் எப்படி இணைக்கப்பட்டிருக்கிறது?
7. இங்குள்ளவர் பேசும் பாஷைகள் எவை?
8. மலையாளத்திலுள்ள முகம்மதியர்களுக்கு என்ன பெயர்?
9. மேற்குக் கடற்கரையிலுள்ள சில துறைமுகங்கள் யாவை?

---

## 26. வடசர்க்கார்ப் பிரதேசம்

இந்தியாவின் மேற்குக் கடற்கரைச் சமவெளி ஒரே தொடர்ச்சியாகவும் நீளமாகவும் இருக்கிறது. ஆனால், கிழக்குக் கடற்கரைச் சமவெளி அப்படியில்லை. இது முதலில் தெற்கிலிருந்து வடக்காகச் செல்லுகிறது; பிறகு வட கிழக்காகத் திரும்புகிறது. ஆகையால் இது இரு பிரிவாக இருக்கிறது. இவ்விரு பிரிவுகளில் வடகிழக்கில் கடற்கரை ஓரமாக உள்ள சமவெளி **வடசர்க்கார்ப் பிரதேசம்**. இது கோதாவரி, கிருஷ்ணா நதிகள் பாயும் டெல்டாப் பிரதேசமாகும். விசாகப் பட்டினம், கோதாவரி, கிருஷ்ணா, குண்டூர் ஜில்லாக்கள் இதில் அடங்கும்.

கிருஷ்ணா நதியில் விஜயவாடாவிலும் கோதாவரி நதியில் **தவளேஸ்வரம்** என்னுமிடத்திலும் இரு அணைகள் கட்டி நீரைத் தேக்கிப் பாசனவசதி செய்திருக்கின்றனர். கோதாவரி நதியில் **ராமபாதசாகர்** என்ற பெரிய அணை யொன்றைக் கட்டத் திட்டமிட்டு அதற்கான வேலை ஆரம்பமாகி யிருக்கிறது. இதனால் இப் பிரதேசம். பாசன வசதி அதிகம் பெற்றுச் செழிப்புறும். இது மழை குறைவான பிரதேசம். பாசன வசதியுள்ள இடங்களில் நெல், கரும்பு, புகையிலை பயிர் செய்கின்றனர். மற்ற இடங்களில் புன்செய்த் தானியங்கள் பயிராகின்றன.

**விசாகப்பட்டினம்** சிறந்த துறைமுகம். இங்குள்ள கடலுள் நீண்டிருக்கும் பாறைக்கு **டால்பின்ஸ் நோஸ்** என்று பெயர். இங்குக் கப்பல் கட்டும் தொழில் நடைபெறுகின்றது. பிரதமர் ஸ்ரீ நேருவால் மிதக்கவிடப்பட்ட **ஜல உஷாவும்**, உதவிப் பிரதமராயிருந்து காலஞ் சென்ற ஸ்ரீ வல்லபாய் பட்டேலால் மிதக்கவிடப்பட்ட **ஜலப் பிரபாவும்** இங்குக் கட்டப்பட்ட கப்பல்களே. விசாகப்பட்டினம் மாங்கனீசுக்குப் பெயர்போனது. இவ்வுலோகம் இரும்புடன் கலந்து எஃகு செய்வதற்குப் பயன்படுகிறது. இங்கு வசிப்பவர்கள் ஆந்திரர்கள். அவர்கள் தெலுங்கு பாஷை பேசுகின்றனர்.

### கேள்விகள்

1. வடசர்க்கார்ப் பிரதேசம் எது?
2. வடசர்க்கார்ப் பிரதேசத்தில் பாயும் நதிகள் யாவை?
3. இப் பிரதேசத்தில் கப்பல் கட்டும் தொழில் எங்கு நடைபெறுகின்றது?

---

## 27. கர்நாடகச் சமவெளி

வடக்கே நெல்லூரிலிருந்து தெற்கே காவிரிவரை உள்ள பிரதேசத்தைக் கர்நாடகச் சமவெளி என்று சொல்லுவர். இதில் அடங்கியுள்ள ஜில்லாக்களைப் படத்தில் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள். இங்கு வட பெண்ணை, தென்பெண்ணை, பாலாறு ஆகிய நதிகள் பாய்கின்றன. இப் பிரதேசம் வடகிழக்குப் பருவக் காற்றால் சொற்ப மழை பெறுகிறது. இங்கு ஏரிகளின் உதவியால் சமவெளிகளில் நெல் சாகுபடியாகின்றது. இங்குக் கரும்பும் சிறிது பயிராகின்றது. இங்கு வேர்க்கடலை அதிகமாகப் பயிராகின்றது. விவசாயம், ஆடுமாடுகள் மேய்த்தல், நெசவு முதலியன இங்குள்ள முக்கியத் தொழில்களாகும்.



மஹாபலிபுரம் — கடற்கரைக் கோயில்

நெல்லிக்குப்பம் சர்க்கரைத் தொழிற்சாலையால் பிரசித்திபெற்றது. திருவண்ணாமலை, காஞ்சீபுரம், சிதம்பரம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்கள் இச் சமவெளியில் உள்ளன. மஹாபலிபுரம் பல்லவச் சிற்பங்களால் சிறந்து விளங்கும் கடற்கரைக் கிராமம். ஒரு சமயம் அது பல்லவர்களின் துறைமுகமாக விளங்கியது.

தென் ஆற்காட்டில் நிலக்கரி இருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டு இருக்கிறது. சீக்கிரம் அது ஒரு பெரிய தொழிற்சாலைப் பிரதேசமாகலாம்.

### கேள்விகள்

1. கர்நாடகச் சமவெளியில் அடங்கும் பிரதேசம் எது?
2. இச்சமவெளியில் பாயும் ஆறுகளைக் கூறு.
3. கர்நாடகச் சமவெளியின் விளைபொருள்கள் யாவை?
4. மஹாபலிபுரம் எப்படி முக்கியமானது?

---

## 28. மதுரைச் சமவெளி

இதில் மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்கள் அடங்கியுள்ளன. இது வைகை, தாமிரபருணி நதிகள் பாயும் பிரதேசம்.

மதுரை வைகைக் கரையில் இருக்கின்றது. இது பாண்டியர்களின் தலைநகராகவும், தமிழ்ச் சங்கங்களின் இருப்பிடமாகவும் இருந்து வந்திருக்கிறது. இது பழம் பெருமை வாய்ந்தது. பெரியாற்றுத் திட்டத்தால் இது வளம்பெற்று இருக்கின்றது. மதுரைச் சமவெளியில் நெல்லும், புன்செய்த் தானியங்களும் பயிர் செய்யப்படுகின்றன. இராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களில் பனைமரம் அதிகம். இங்குப் பனை வெல்லம் காய்ச்சுதல் முக்கியமான தொழில் ஆகும். மதுரை, துணி நெசவிற்குப் பெயர்போனது. இது மீனாட்சி அம்மன் கோவிலாலும் பிரசித்தி பெற்றது.



பாம்பன் பாலம்

[இங்குக் கப்பல் படகு முதலியவை போகும்போது பாலம் திறக்கும் காட்சியைப் பாருங்கள்]

தூத்துக்குடி இப்பிரதேசத்தின் துறைமுகம். இங்குதான் வ. உ. சி. கப்பலை நம் ராஜ்ய முதல் அமைச்சர் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் மிதக்கவிட்டார். தூத்துக்குடிக்கு அருகில் கடலில் முத்துக் குளிக்கின்றனர்.

இச் சமவெளியில் பல யாத்திரை ஸ்தலங்கள் இருக்கின்றன. அவைகளில் மதுரை, திருப்பரங்குன்றம், பழனி, திருச்செந்தூர், இராமேஸ்வரம் முதலியன முக்கியமானவை.

இராமேஸ்வரம் ஒரு தீவு. அதைப் படத்தில் பாருங்கள். அத்தீவின் மற்றொரு கோடியில் இருப்பது தனுஷ்கோடி. அத் தீவிற்கும் இந்தியாவிற்கும் இடையில் அமைந்திருப்பது ஒரு இழுக்கும் பாலம். இதுதான் பாம்பன் பாலம் எனப்படுகின்

றது. இது ரயில் போகவும், கப்பல் போகவும் வசதியாக அமைக்கப்பட்டிருக்கிறது.

திருநெல்வேலி ஜில்லாவின் தென்கோடி முனைதான் கன்யாகுமரி முனை. இது அழகான கடற்கரைக் காட்சியுடையது.

### கேள்விகள்

1. மதுரைச் சமவெளியில் அடங்கிய ஜில்லாக்கள் எவை?
2. மதுரை எதனால் பெருமை வாய்ந்தது?
3. இராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களின் முக்கியத் தொழில் எது?
4. பாம்பன் பாலம் எங்கு அமைந்திருக்கிறது?
5. இங்குள்ள சில புண்ணிய க்ஷேத்திரங்கள் எவை?

## 29. சென்னை நகரம்

இது கர்நாடகச் சமவெளியில் உள்ள ஒரு செயற்கைத் துறைமுகம். கிழக்கிந்தியக் கம்பெனியார் இதை வாங்கி இங்கு முதன் முதலில் வியாபாரம் செய்து வந்தனர். பிறகு அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக ஆட்சி செய்ய ஆரம்பித்தனர்.



சென்னை உயர் நீதிமன்றக் கட்டிடத்தில் உள்ள கலங்கரை விளக்கு



சென்னைத் துறைமுகத்தின் வெளித்தோற்றம்

போட்டோக்கள்: பிலோ இருதயநாத்

செம்படவர் கிராமமாக இருந்த சென்னை இப்போது செல்வந்தர்பட்டினமாக விளங்குகின்றது. இது உள் நாட்டுடன் பல பாகங்களிலும் இணைக்கப்பட்டு இருக்கின்

றது. சென்னை நமது ராஜ்யத்தின் தலைநகர். இது ஜன நெருக்கமுள்ள பட்டினம். இது வியாபாரத்தினால் சிறந்து விளங்குகிறது.

இங்கு அரசாங்கக் கட்டிடங்களும், தொழிற்சாலைகளும், வியாபாரக் கிடங்குகளும், பாங்கிகளும் இருக்கின்றன. எழும்பூர், சென்டிரல் போன்ற பெரிய ரயில் நிலையங்கள் இருக்கின்றன. இங்குப் பெரிய கல்லூரிகள் இருக்கின்றன. இங்கு உயர்நீதிமன்றம் இருக்கிறது. மீனம்பாக்கம் இதற்கு அருகில் உள்ளது. இது ஒரு ஆகாய விமான நிலையம். சென்னைக்குச் சமீபத்தில் உள்ள திருவொற்றியூரில் தீக்குச்சித் தொழிற்சாலை இருக்கிறது. சென்னையின் ஒரு பகுதியான மயிலாப்பூரில் பிரசித்திபெற்ற கபாலீஸ்வரர் ஆலயம் இருக்கிறது.



சென்னைக் கபாலீஸ்வரர் ஆலயம்

சென்னைத் துறைமுகம் செயற்கைத் துறைமுகம். மற்ற இயற்கைத் துறைமுகங்களைப் போல இங்குக் கடல் ஆழமாக இல்லை. இத் துறைமுகத்தில் மூன்று பக்கங்களில் சுவர் எழுப்பிக் கடலை ஆழமாக்கி இருக்கின்றனர். இது அடிக்கடி மணலால் தூர்ந்துவிடுகிறது. ஆகவே இது அதிக செலவில் பாதுகாக்கப்படுகின்றது. இத்துறைமுகம் ஒரு பெரிய வியாபாரத் துறைமுகம். கடற்கரையோரம் மக்கள் மாலை நேரத்தை உல்லாசமாகக் கழிக்கச் சென்னைக் கார்ப்பரேஷன் பல துறைகளில் வசதி செய்து கொடுத்திருக்கிறது.

## கேள்விகள்

1. சென்னைப் பட்டினம் முதலில் எப்படி இருந்தது?
2. சென்னை செல்வந்தர் பட்டினமாக முன்னேறியதற்குக் காரணங்களெவை?
3. சென்னைத் துறைமுகம் எப்படி ஒரு செயற்கைத் துறைமுகம் ஆகும்?

———

# 30. இலங்கைத் தீவு

இத் தீவு பார்ப்பதற்கு ஓர் ஆப்பிள் போலவும், உரித்த தேங்காயைப் போலவும் காணப்படுகின்றதல்லவா? இலங்கை இயற்கைக் காட்சிகள் நிறைந்தது. தனுஷ்கோடியில் இருந்து மோட்டார் படகில் பிரயாணம் செய்து தலை மன்னார் தீவை அடையலாம். பிறகு ரயில் மூலம் இலங்கையினுள் பிரவேசிக்கலாம்.




இலங்கைத் தீவு

இத்தீவின் மத்தியபாகம் மலைப்பிரதேசம்; கடற்கரை ஓரம் சமவெளிப் பிரதேசம். இங்கு இரு பருவக் காற்றுகளாலும் மழை பெய்கிறது. பூமத்திய ரேகைக்கு அருகாமையில் இருப்பதால் இங்கு வெப்பம் அதிகம். தென்னை மரங்கள் இங்கு அதிகம். மலைச்சரிவுகளில் ரப்பர், கோக்கோ, தேயிலை முதலியன பயிர் செய்யப்படுகின்றன. இங்குச் சமவெளியில் நெல்லும் பயிராகின்றது.

இங்குள்ளவர்களுக்குத் தேங்காய் நாரினால் கயிறு திரித்தல், ரப்பர், தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்தல் முதலியன முக்கியமான தொழில்களாகும். இங்கு ரப்பர், தேயிலைத் தோட்டங்களில் கூலி வேலை செய்வதற்காக

இந்தியாவிலிருந்து பலர் குடியேறி இருக்கின்றார்கள். மீன்பிடித்தலும், முத்துக் குளித்தலும் இங்கு நடைபெறும் பிற தொழில்கள் ஆகும்.



இலங்கையிலுள்ள புத்தர் கோயில்



தேயிலை

இங்கு வாழ்பவர்கள் சிங்களவர் என்று அழைக்கப்படுகின்றனர். அவர்கள் பேசும் பாஷை சிங்களம். அவர்களுடைய மதம் பௌத்த மதம். இங்குப் பல பௌத்த கோயில்களைப் பார்க்கலாம்.

மேற்குக் கரையில் இருக்கும் கொழும்பு இத்தீவின் தலைநகரம். இது ஒரு சிறந்த துறைமுகமாகும். கண்டி ஒரு பழைய பட்டணம். இத்தீவின் வடபாக மான யாழ்ப்பாணம், தமிழர்கள் நிறைந்த இடம்.

சென்னையிலிருந்து இலங்கைக்கு ஆகாய விமானப் போக்குவரவும், கப்பல் போக்குவரவும் உண்டு.

## கேள்விகள்

1. இலங்கைத்தீவு எங்கு இருக்கிறது?
2. இத்தீவு உருவத்தில் எப்படி அமைந்திருக்கிறது?
3. இத்தீவின் மத்திய பாகம் எப்படிப்பட்டது?
4. சமவெளிகள் எங்குள்ளன?
5. இத்தீவிலுள்ளவர்களின் முக்கியத் தொழில்கள் யாவை?
6. இத்தீவின் தலைநகர் எது?

---

# 31. இந்தியாவின் கைத்தொழிற் பிரதேசம்

ஒரு நாட்டின் செல்வம் செழிக்கவேண்டுமானல் தொழிற்சாலைகள் பெருக வேண்டும். தொழிற்சாலைகள் பெருக இரும்பும் நிலக்கரியும் அருகருகே கிடைக்க வேண்டும். இரும்பும் நிலக்கரியும் தொழில் வளர்ச்சியின் இரு கண்கள் என்றே கூறலாம்.

வங்காளத்தில் தாமோதர் நதிப் பள்ளத்தாக்கு நிலக்கரிச் சுரங்கங்கள் நிறைந்த பிரதேசம். இதற்கு அருகில் பீஹார் மாகாணத்தில் ஜெம்ஷட்பூர் என்னு மிடத்தில் இரும்பு கிடைக்கிறது. அருகில் மாங்கனீசும் கிடைக்கிறது. இங்கு ஜெம்ஷட்ஜீ டாட்டா என்னும் பார்ஸி தனவானல் ஒரு தொழிற்சாலை ஏற்படுத்தப்பட்டு இருக்கிறது. இத்தொழிற்சாலைப் பிரதேசம் டாட்டா நகர் என்றே அழைக்கப்படுகிறது.



டாட்டா இரும்புத் தொழிற்சாலை

இங்கு இரும்பு, எஃகுச் சாமான்கள் பெருவாரியாகச் செய்யப்படுகின்றன. இத்தொழிற்சாலை இரண்டாம் உலக மகா யுத்தத்தில் நேச நாடுகளுக்கு இரும்புச் சாமான்கள் பல செய்து உதவியது. கர்டர், தண்டவாளங்கள் முதல், கடப்பாரை மண்வெட்டி வரை, எல்லாவிதமான இரும்புச் சாமான்களும் இங்குச் செய்யப்படுகின்றன.

தென் இந்தியாவில், தென் ஆற்காட்டில் நிலக்கரிச் சுரங்கங்கள் கண்டு பிடிக்கப்பட்டிருப்பதால் அங்கும் பல தொழிற்சாலைகள் ஏற்பட இடமிருக்கிறது.

### கேள்விகள்

1. ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு எப்படிப்பட்ட வசதிகள் வேண்டும்?
2. நிலக்கரிச் சுரங்கங்கள் நிறைந்த பிரதேசம் எது?
3. டாட்டாநகர் என்று எதற்குப் பெயர்? அது எம் மாகாணத்திலுள்ளது?
4. டாட்டாநகர் ஒரு பெரிய தொழிற்சாலைப் பட்டணமாக இருக்கக் காரணம் என்ன?

## 32. இந்தியாவின் ராஜ்யப் பிரிவுகள்



பிள்ளைகளே, நாம் வசிக்கும் இந்திய நாடு பல ஆண்டுகளாக அன்னியர் ஆட்சியில் சிக்கி இருந்தது. மகாத்மா காந்தியடிகள், நேரு, பட்டேல், ராஜாஜி போன்ற தலைவர்களின் சேவையால் 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ஆம் தேதி நம் நாட்டின் ஆட்சிப் பொறுப்பு நம் கையில் வந்தது. நாமிருக்கும் நாட்டை நாமே ஆளும் உரிமை பெற்றோம்.



காந்தியடிகள்



பாபு ராஜேந்திரப் பிரசாத்





ஜவஹர்லால் நேரு



சர்தார் வல்லபாய் பட்டேல்

நாம் சுதந்திரம்பெறுவதற்குமுன் நம் நாடு இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டது. ஒன்று இந்திய யூனியன்; மற்றொன்று பாகிஸ்தான். மேற்குப் பஞ்சாப்,

வடமேற்கு எல்லைப்புற மாகாணங்கள், பலுஜிஸ்தானம், சிந்து, கிழக்கு வங்காளம், இவை பாகிஸ்தானுள் அடங்கியவை. இவை தவிர, மற்றவை இந்திய யூனியனைச் சேர்ந்தவை.

நமது நாடு பூர்ண சுதந்திரக் குடியரசு என்று 1950 ஜனவரி 26-ம் தேதி பிரகடனப் படுத்தப்பட்டது. நமக்கென ஓர் அரசியல் திட்டமும் வகுக்கப் பட்டது. அந்தத் திட்டத்தின்படி நம் நாடு பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது.




1. காஷ்மீரம்
2. கிழக்குப் பஞ்சாப், பாட்டியாலா
3. இராஜஸ்தான்
4. உத்திரப் பிரதேசம்
5. பீஹார்
6. அஸ்ஸாம்
7. மேற்கு வங்காளம்
8. விந்தியப் பிரதேசம்
9. மத்தியபாரத்
10. சௌராஷ்டிரம்
11. பம்பாய்
12. மத்தியப் பிரதேசம்
13. ஒரிஸா
14. ஹைதராபாத்
15. சென்னை
16. மைசூர்
17. திருவாங்கூர்—கொச்சி ஐக்கியம்.

முன்பு மாகாணங்கள் என்று அழைக்கப்பட்டவை அரசியல் திட்டத்தின் படி இப்பொழுது ராஜ்யங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இந்திய யூனியனில் மொத்தம் 17 ராஜ்யங்கள் இருக்கின்றன.

புதிய அரசியல் சட்டத்தின் கீழ் நம் தேசத்தில், 1952 ஜனவரி மாதத்தில் பொதுத் தேர்தல் நடைபெற்றது. அந்தத் தேர்தல்தான் இந்தியா குடியரசான பின் நடந்த முதல் தேர்தல். அந்தத் தேர்தலின் மூலம் ராஜ்ய சட்டசபைகளுக்கும், மத்திய சட்டசபைகளுக்கும் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

அவ் அங்கத்தினர்களால் பாபு ராஜேந்திரப் பிரசாத் அவர்கள் இந்திய ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார். மீண்டும் ஜவஹர்லால் நேருவே நம் நாட்டின் பிரதம மந்திரியாகத் தேர்ந்தெடுக்கப்பட் டிருக்கிறார்.

## கேள்விகள்

1. சுதந்திர இந்தியாவின் மாகாணங்களுக்கு என்னவென்று பெயர்?
2. கவர்னர்களின் கீழுள்ள பிரிவிலுள்ள ராஜ்யங்கள் எவை?
3. நம் நாட்டின் பிரதம மந்திரி யார்?




நமது ராஜ்யம் சென்னை ராஜ்யம். இது பல ஜில்லாக்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. இது சுமார் 127,000 சதுர மைல்கள் விஸ்தீரணமுடையது. இதன் ஜனத்தொகை சுமார் 575 லட்சமாகும். இது 1750 மைல் நீண்ட கடற்கரையைக் கொண்டது.

இந்த ராஜ்யத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைகள், கிழக்குத் தொடர்ச்சி மலைகள் இருக்கின்றன. கோதாவரி, கிருஷ்ணா, வட பெண்ணை, பாலாறு, தென் பெண்ணை, காவிரி, வைகை, தாமிரபருணி என்னும் எட்டு ஆறுகள் இப்பிரதேசத்தில் பாய்கின்றன.



குழந்தைகளுடன் முதன் மந்திரி ராஜாஜி

இது கவர்னர் ஆட்சிக்கு உட்பட்ட இரண்டு சட்ட சபைகளைக் கொண்டது. இப்பொழுது நமது ராஜ்யத்தின் கவர்னராகப் பதவியேற்றிருப்பவர் ஸ்ரீ பிரகாசா அவர்கள். இப்போதைய நமது முதன் மந்திரி ஸ்ரீ சி. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள். அவரை நாம் ராஜாஜி என்று அழைகிறோம். இவ்வளவு பெரிய பிரதேசத்தையுடைய நமது ராஜ்யம் நிர்வாக சௌகரியத்துக்காகவே இப்படிப் பல ஜில்லாக்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

இதன் விபரத்தை அடுத்த பக்கத்தில் உள்ள அட்டவணையைப் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள்.

## கேள்விகள்

1. வடசர்க்காப் பிரதேசத்திலுள்ள ஜில்லாக்கள் எவை?
2. மலையாளம், தென் கன்னடம், மேற்குக் கோதாவரி, உதகமண்டலம், தென் ஆற்காடு, வட ஆற்காடு ஜில்லாக்களின் தலைநகரங்கள் எவை?

# சென்னை ராஜ்யத்தின் ஜில்லாக்கள்

| இயற்கைப் பிரதேசம் | ஜில்லா | தலை நகர் | தொழில் |
|---|---|---|---|
| 1. வடசர்க்கார் | 1. விசாகப்பட்டினம்<br>2. கிழக்குக் கோதாவரி<br>3. மேற்குக் கோதாவரி<br>4. கிருஷ்ணா<br>5. குண்டூர் | விசாகப்பட்டினம்<br>காக்கிநாடா<br>ஏலூர்<br>மசூலிப்பட்டணம்<br>குண்டூர் | மாங்கனீஸ் வெட்டி எடுத்தல் பயிர்த் தொழில் |
| 2. தட்சிணப் பீடபூமிப் பிரதேசம் | 6. கடப்பை<br>7. கர்நூல்<br>8. அனந்தப்பூர்<br>9. பல்லாரி | கடப்பை<br>கர்நூல்<br>அனந்தப்பூர்<br>பல்லாரி | ஆடு மாடு மேய்த்தல், விவசாயம், கடப்பைக்கல் வெட்டி எடுத்தல் |
| 3. காவிரிப் பிரதேசம் | 10. சேலம்<br>11. கோயம்புத்தூர்<br>12. திருச்சிராப்பள்ளி<br>13. தஞ்சாவூர் | சேலம்<br>கோயம்புத்தூர்<br>திருச்சி<br>தஞ்சாவூர் | விவசாயம், நெசவு |
| 4. மதுரைச் சமவெளி | 14. மதுரை<br>15. ராமநாதபுரம்<br>16. திருநெல்வேலி | மதுரை<br>ராமநாதபுரம்<br>திருநெல்வேலி | விவசாயம், பருத்தி ஆலையில் வேலை செய்தல், பனைவெல்லம் காய்ச்சுதல் |
| 5. மேற்குக் கரைப் பிரதேசம் | 17. மலையாளம்<br>18. தென்கன்னடம் | கள்ளிக்கோட்டை<br>மங்களூர் | காப்பி, தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்தல், மரம் வெட்டுதல், மீன் பிடித்தல், தென்னைமரப் பொருள்கள் சேகரித்தல், கயிறு திரித்தல் |
| 6. மலைப் பிரதேசம் | 19. நீலகிரி | உதகமண்டலம் | தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்தல் |
| 7. கர்நாடகப் பிரதேசம் | 20. சென்னை | சென்னை | விவசாயம் |
| | 21. செங்கற்பட்டு<br>22. தென் ஆற்காடு<br>23. வட ஆற்காடு<br>24. நெல்லூர்<br>25. சித்தூர் | செங்கற்பட்டு<br>கடலூர்<br>வேலூர்<br>நெல்லூர்<br>சித்தூர் | நெசவு, தோல் பதனிடுதல், ஆடுமாடு வளர்த்தல், பழத் தோட்டங்கள் பயிர் செய்தல் |

3. மேற்குக் கரைப் பிரதேசங்களின் முக்கியத் தொழில்கள் எவை?
4. நமது ராஜ்யத்தின் பிரதம மந்திரியின் பெயரென்ன?
5. சென்னை கவர்னர் யார்?

6. பூர்த்தி செய்:

குண்டூர் ——————— பிரதேசத்தைச் சேர்ந்தது.
திருச்சி ——————— பிரதேசத்தைச் சேர்ந்தது.

——

## 34. உங்கள் தாலுக்கா

ஒரு ஜில்லாவைப் பல தாலுக்காக்களாகப் பிரித்திருக்கிறார்கள். ஒவ்வொரு தாலுக்காவிற்கும் ஒவ்வொரு தாசில்தார் உண்டு. தாசில்தார் தாலுக்காவின் அதிகாரி.

உங்கள் தாலுக்கா எந்த ஜில்லாவில் இருக்கிறது? அதன் பெயர் என்ன? அங்கு ஆறுகள் ஓடுகின்றனவா? அதன் இயற்கை யமைப்பு எவ்வாறு இருக்கிறது? அங்கு விளையும் பொருள்கள் என்னென்ன? அங்கு வாழ்பவர்களின் முக்கியத் தொழில்கள் யாவை? பார்க்கத் தகுந்த இடங்கள் ஏதேனும் உங்கள் தாலுக்காவில் இருக்கின்றனவா? உங்கள் தாலுக்காவில் பேசப்படும் மொழி என்ன? அங்குள்ள போக்கு வரவுச் சாதனங்கள் யாவை? உங்கள் தாலூக்கா எப்படிப் பிரசித்தி பெற்றது?



——

### சில பயிற்சிகள்

1. இந்திய விளை பொருள்களைச் சேகரித்து அவற்றின் கீழ் அவை எப்பிரதேசத்தில் முக்கியம் என்பதைக் குறித்துக் கண்காட்சிச் சாலையில் வையுங்கள்.
2. ரம்பத்தூள் வச்சிரப்பசை கொண்டு இந்திய-இலங்கை இயற்கை அமைப்புப்படம் தயாரித்து ஏற்ற வர்ணமிடு.
3. படப்புத்தகம் தயாரித்து அதில்—
(1) இந்தியாவில் பார்க்கக்கூடிய இடங்கள், (2) வசிக்கும் மக்கள் (ஆந்திரர், பஞ்சாபி, சீக்கியர், மலையாளி, சிங்களவர்), (3) தொழிற்சாலைகள் முதலியவற்றின் படங்களை வகைப்படுத்தி ஒட்டுங்கள்.
4. களிமண்ணைக் கொண்டு மலைகள், அணைகள், ஆறுகள் முதலியன அமைத்துப் பாருங்கள்.
5. படங்களாலான இந்தியா தயார் செய்யுங்கள். (இந்தியா படம் வரைந்து அதில் முக்கியமான படங்களை ஒட்டுதல்).
6. உங்கள் கிராமத்தின் தரைப்படம் (பிளான்) வரையுங்கள்.
7. ரயில்வண்டியில் நம் இந்தியாவின் முக்கிய இடங்களுக்குப் பிரயாணம் செய்வதுபோல் நடியுங்கள். ஸ்டேஷன்கள், க்ஷேத்திரங்கள் வந்தால் அவ்விடத்தைப் பற்றிச் சுருக்கமாக உங்களில் ஒருவர் சொன்னதும் வண்டி அவ்விடம் விட்டுப் புறப்படவேண்டும்.

——

